## உங்கள் வதனம் இயற்கைப்பொலிவுடன் எழிலாய் விளங்க
## பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர்

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர் உபயோகித்தால் உங்கள் வதனப்பொலிவு இயற்கை எழிலோடு வசீகரமாய் விளங்கும். இது திட்டுத்திட்டாகத் தெரியாமல் ஒரே சீராகப் படிந்து முகத்திலுள்ள மாசு மறுக்களை மறைத்து விடுகிறது. பாண்ட்ஸ் ட்ரீம்ஃளவர் ஃபேஸ் பவுடர் பல இளம் நிறங்களில் கிடைக்கிறது. இது உங்கள் முக சருமத்தை மினுமினுப்பாக்கி நீடித்த நேரம் கவர்ச்சியுடனிருக்கச் செய்யும்.




**பாண்ட்ஸ்**
ட்ரீம்ஃப்ளவர்
ஃபேஸ் பவுடர்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ. வில் இணைக்கப்பட்டது)

# அமிர்தாஞ்சனம்

## தடவி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

உடலில் ஒரு பகுதியை மட்டும் பாதிக்கும் வலிக்காக உள்ளுக்கு மருந்து சாப்பிடுவானேன்? வலிக்கும் இடத்தின் மேல் மட்டும் அமிர்தாஞ்சனம் தடவி விரைவாக வலி நிவாரணம் அடையுங்கள். பத்து மருந்துகள் கொண்டு விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டுள்ள அமிர்தாஞ்சனம் சுளுக்கு, தலைவலி, தசைவலி மற்றும் மூட்டு வலிகளுக்கு சிறந்த வகையில் நல்ல நிவாரணமளிக்கும். மற்றும் மார்புச்சளி, ஜலதோஷம் போன்றவைக்கும் ஏற்ற மருந்து அமிர்தாஞ்சனம். ஒரு சமயத்தில் தேவையானதெல்லாம் மிகச் சிறு அளவே; ஆதலால், ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்திற்கு மாதக்கணக்கில் வரும். • அமிர்தாஞ்சனம் 70 வருடங்களாகக் குடும்பங்களில் பயன்பட்டு வரும் கைகண்ட நிவாரணி

**பத்து மருந்துப் பொருள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற சிறந்த நிவாரணி.**

## சுளுக்கு

எவ்வளவு அசௌகரியமாக இருப்பினும் உபாதை

**வலிக்கும் பகுதியில்**

மட்டுமே




அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்
பம்பாய் - கல்கத்தா - டெல்லி


1964
1962
1960
1958
1955

சென்னை
சித்ரா · பிராட்வே
மேகலா
மற்றும் தென்னாடெங்கும்



தேவர் பிலிம்ஸ்

# தொழிலாளி

டைரக்ஷன் - M.A. திருமுகம்



கதை • தயாரிப்பு • சாண்டோ M.M.A. சின்னப்பா தேவர்

# கற்பனை உருவின் அற்புத மென்மை



ஸான்போரைஸ்ட் பாப்ளின்ஸ் :

கோல்ட் ட்ரிங்க், ப்ளுபர்ட், எவர் ப்ரைட், குட் லைஃ

ஷர்ட்டிங்ஸ் :

ஸ்டிரைப், டாப்பி, செக்ஸ், பைஜாமா

தோதீஸ் :

ராஜா ஸ்பெஷல், ராணி ஸ்பெஷல், ப்ளாடினம், காம்ப்ரு

ஸூட்டிங்ஸ் :

காபர்டின்

சொகுசான கலர் புட்டாக்கள் :

ப்ரிண்ட்ஸ் :

ப்ரிண்டட் லான்ஸ், வாயில்ஸ், பாப்ளின்ஸ்,
ஸ்கிரீன் ப்ரிண்ட் லாசீஸ்

2x2 கவர்ச்சியான முழு வாயில்கள்—வீரேளுவிலும் புட்டாக்களிலும்













## அரவிந்த்

மில்ஸ் லிமிடெட்

அஹமதாபாத்

# பளபளப்பான செந்நிறத் தரைகள்

## — உங்கள் வீட்டிற்குப் பெருமை!

சிவப்பு கார்டினல் பாலிஷ் மூலம் உங்கள் வீட்டுத் தரைகளை செந்நிற ஒளியுடன் பிரகாசிக்கும்படி வைத்துக் கொள்ளுங்கள். மினுமினுப்பற்ற சாதாரண கல்தரையானாலும் சிமிட்டித் தரையானாலும் பளபளப்பைக் கொடுப்பதில் சிவப்பு 'கார்டினல் பாலிஷ்' அற்புதமாக வேலை செய்யக்கூடியது. கணநேரத்தில் மங்கலான தரையை புதியதோர் செந்நிற ஒளியுடன் பிரகாசிக்கும்படி செய்துவிடும்! உங்கள் வீட்டின் அழகான தரையை அழகாகவும் பளபளப்பாகவும் வைத்துக் கொள்ள இன்றே, சிவப்பு கார்டினல் தரைப் பாலிஷை உபயோகியுங்கள்!




# சிவப்பு கார்டினல் பாலிஷ்

அட்லாண்டிக் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

## ஆயுள் இன்சூரன்ஸ் பாலிசிதாரர்களுக்கு

**உங்களுடைய வயது நிரூபணத்திற்குத் தேவைப்படுவதை அனுப்பிவிட்டீர்களா?**

**உங்களுடைய முகவரி மாற்றத்தைத் தெரியப்படுத்திவிட்டீர்களா?**

**உங்களுடைய வாரிசுதாரரை நியமித்துவிட்டீர்களா?**

இத்தகைய முக்கிய விபரங்கள் தேவைப்படுகின்ற காரணத்தால் பல ஆயுள் இன்சூரன்ஸ் பாலிசிகளின் உரிமைகளை உடனடியாகத் தீர்க்க இயலாமலிருக்கின்றன. உங்களுடைய பாலிசியை இன்றே பரிசீலித்து தேவையான விபரங்கள் அனைத்தும் முறைப்படி உள்ளனவா என்று பாருங்கள். உரிய நேரத்தில், உரிய அலுவலகத்தில் உங்கள் பிரீமியத்தைத் தவறாமல் செலுத்திவர மறவாதீர்

- பாலிசிதாரர்கள் கொடுத்திருந்த முகவரியில் அவர்கள் காணப்படாமையால், கடந்த ஆண்டில், 8,812 பாலிசிகளின் உரிமைகள் தீர்க்க இயலாமற்போயின
- தேவையான வயது நிரூபணம் இல்லாமையால் 4,097 பாலிசிகளின் உரிமைப்பணம் செலுத்த இயலாமற்போயிற்று
- வாரிசுதாரர்களின் பெயர்கள் குறிக்கப்படாத காரணத்தால் 4,718 பாலிசிகளின் பணம் கொடுபட தாமதமாயிற்று

**நீங்கள் ஒருவர்தான் இத்தகைய தாமதத்தைத் தவிர்க்க முடியும்.**



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

# இன்றே செய்வீர்

## உண்மைக் காதலர்கள்

கோலக் கிளியின் மொழிகேட்டால்
கூட்டில் அடைப்பார் என்றஞ்சிக்
கோலக் கிளியும் மழலைமொழி
கொஞ்சிப் பேசா திருந்திடுமோ?

சேர்க்கும் தேனை மனிதரினம்
தேடிக் கவர்ந்தே எடுத்தாலும்
சேர்க்கும் தேனைத் தேனீக்கள்
திரும்பச் சேர்க்கா திருந்திடுமோ?

வாழை குலையை ஈனுவதால்
மடியச் செய்வர் என்றஞ்சி
வாழை குலையை ஈனுமல்
வாழ்வில் மலடாய் இருந்திடுமோ?

உண்மை அன்புக் காதலரை
உலகே எதிர்த்துத் தடுத்தாலும்
பெண்ணே! காதல் வளர்ப்பார்கள்!
பிரிவைத் தகர்த்தே இணைவார்கள்!

— தமிழ் முடி

# கல்கி

## பொருளடக்கம்

குரோதி புரட்டாசி 25 - அக்டோபர் 11



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

அ-ட்-டெ-ன்-ஷ-ன்!

உத்தரப் பிரதேசம்

"இன்னமும் அவர்கள்
நேரு மார்க்கத்தை
விட்டுவிலகவில்லை
என்கிறார்களே!"

காங்கிரஸ்
மேலிடம்

PK



மலர் 24 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 11

# அவமானம் தரும் ஏற்பாடு

**ப**தவி ஏற்பதற்கு முன்பு மந்திரிகளும், அவர்களுடைய குடும்பத்தினரும் தங்கள் சொத்துக்களை வெளியிட வேண்டும் என்று அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. நாட்டிலே லஞ்ச ஊழல் சூழ்நிலை எவ்வளவு அசங்கியமாக ஆகியுள்ளது என்பதற்கு இதைவிட வேறு சான்று தேவையில்லை. பொதுப்பணமாகிய கோடாநு கோடி ரூபாய்களை நிர்வகிக்கவும், சோஷலிஸ முறைக்கு என்றே வகுக்கப்பட்ட வர்த்தகச் சலுகைகளை வழங்குவதற்கும் மந்திரிகள் மாபெரும் பொறுப்புப் பெற்றுள்ளனர். இவ்வாறு பெரும் பொறுப்பை அவர்களிடம் நம்பி ஒப்படைத்திருப்பது அவர்களுடைய நாணயமான நடத்தையை அடிப்படையாகக் கொண்டேயாகும். திறமை மட்டுமின்றி, நேர்மையும், உண்மை உணர்வும் நிரம்பியவர்களாக மந்திரிகள் இருப்பார்கள் என்ற நம்பிக்கையிலேயே இத்தனை ஆண்டுகளாக அவர்களிடம் ஆட்சிப் பொறுப்பும், சர்க்கார் கஜானாவும் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. இப்போது, மந்திரிகள் மட்டுமின்றி அவர்கள் குடும்பத்தினரும் சொத்துக்களுக்குக் கணக்குக் காட்ட வேண்டும் என்று செய்துள்ள முடிவு பொறுப்புள்ள ஆட்சித் தலைவர்கள் எவ்வளவுக்குத் தரம் குன்றிப் போயிருக்கிறார்கள் என்பதை ஆளும் கட்சி வாயிலாகவே ஒப்புக் கொள்கிறது. இவர்கள் யாவரும் காங்கிரஸ் கட்சியின் மாபெரும் தலைவர்கள் என்பதை எண்ணும்போது, காங்கிரஸ் சர்க்காரின் புதிய முடிவு காங்கிரஸ் ஸ்தாபனத்தின் ஊழல் போக்கைப் பூரணமாக ஒப்புக் கொள்வதாகவே பொருள்படும். காந்தியடிகளின் சின்னத்தைக் கழுத்தில் கட்டித் தொங்க விட்டுக் கொண்டிருக்கும் புண்ணிய புருஷர்கள் இவ்வாறு தரம் குன்றிப் போவதற்கு முக்கியமான காரணம் பெர்மிட் - லைசென்ஸ் - கோட்டா முறைதான் என்பதில் ஐயமேயில்லை. இந்த முறையை ஒழித்துக் கட்டினால் ஊழல்கள் தாமே ஒழியும். உலக நாடுகளில் எங்குமே காணாத அவமானமாக, மந்திரிமார்கள் சகுடும்ப சமேதராய்க் கணக்கு ஒப்பிக்கும் இழிநிலைக்கு அப்போது அவசியமே யிராது. சந்தேகாஸ்பதமான குற்றவாளிகளைச் சோதனை செய்வது போல் மந்திரிகளைப் பதவியேற்கு முன்னும், பதவியிலிருந்து விலகிய பின்னும் சோதனை செய்யத் தேவையிராது. அகத் தூய்மையோடு கொள்கையை மாற்றிக் கொண்டு, கட்சியிலுள்ள கோதுகளைக் களைந்து, தன்மான உணர்ச்சியுடன் ஆட்சியாளர்கள் நடந்தாலன்றி நாட்டு நிர்வாகம் கௌரவம் பெற முடியாது.

புதிய திட்டத்தின்படி மந்திரிமார்கள் கூறும் கணக்கை அப்படியே ஒப்புக்கொண்டால்மட்டும் போதாது. அதனைத் தணிக்கை செய்ய வேண்டியிருக்கும். பெண்மணிகளின் அணிபணிகள் உள்பட மந்திரி குடும்பங்களின் வீடு வாசல், நிலபுலன் ஆகிய எல்லாவற்றுக்கும் கணக்கு எடுக்க நேரிடும். பெரிய இடங்களில் குடும்பப் பூசல்களும், பிளவுகளும் உண்டாகும். மந்திரிகளுக்கு அமுலாகும் இவ்விதிகளை உயர் அதிகாரிகளுக்கும் அமுலாக்கவேண்டிய அவசியம் நேரும். நாடு முழுவதும் பெருமளவில் கண்காணிப்பும், சோதனையும், தணிக்கையுமாகி, உலக நாடுகள் நம்மைப் பரிகசிக்கும் அவமான நிலையில் நிற்போம். பெர்மிட் - லைசென்ஸ் முறை என்ற ஊழல் உற்பத்தி ஸ்தானத்தை ஒழிக்க முன்வராமல், கண்ணியமான ஸ்தானத்திலுள்ளவர்களை யெல்லாம் குற்றவாளிகளைப் போல் நடத்துவது எத்தகைய அறிவீனம்!

'லைசென்ஸ் பெர்மிட்டுகளை அதம பட்சமாக வெட்டுங்கள்! இதனை ஒரு சுதந்திரமான போட்டிடம் ஒப்புவியுங்கள்! முடிந்த மட்டும் பொதுப்படையாக 'டெண்டர்'கள் கோரியோ,

'பொதுவான ஏலத்தின் மூலமோ லைசென்ஸ் - பெர்மிட்களை வழங்குங்கள்' என்று ராஜாஜி அறிவுரை கூறுகிறார். லாபம் இருப்பதால்தான் இப்போது பெர்மிட் - லைசென்ஸுக்காகப் பலர் தகாத முறையில் போட்டியிட்டு லஞ்ச ஊழலைப் பெருக்குகிறார்கள். ஏலம் விடும் முறையிலோ டென்டர் கோரும் முறையிலோ இதை நேர்மையான போட்டியாக்கி, அரசாங்கம் லாபத்தின் ஒரு பகுதியைப் பெறலாம் என்கிறார் தலைவர் ராஜாஜி. ஆட்சியாளர்கள் இவ்வறிவுரையை ஏற்று அமுலாக்கினால் மந்திரிமார்கள் கணக்குக் காட்டும் கண்ணியக் குறைவான ஏற்பாடு மறையும். மந்திரிமார்கள் மட்டுமின்றி, ஆளும் கட்சிக்காரர்கள், அதிகாரிகள் ஆகியோரிடம் பரவியுள்ள லஞ்ச ஊழல் குறையும். லஞ்சம் பெறுபவர்களைப் போலவே லஞ்சம் கொடுப்பதன் மூலம் ஊழலுக்குக் காரணமாக உள்ள வர்த்தக சமூகமும் இந்தப் பெரும் பாபத்திலிருந்து விடுபடும். மொத்தத்தில் நாட்டில் தூய்மை பெருகும்.

## பக்தவத்ஸலத்துக்குப் பல்லாண்டு

முதன் மந்திரி திரு பக்தவத்ஸலம் அவர்கள் இம்மாதம் ஒன்பதாம் தேதியன்று அறுபத்தேழாண்டுகளை நிறைவு செய்கிறார். விமரிசையான முறையில் பாராட்டுக்களைத் தெரிவிக்க ஏற்பாடுகள் நடக்கின்றன. சமய வளர்ச்சிக்காகவும், கல்வி வளர்ச்சிக்காகவும் அவர் புரிந்து வரும் நற்பணியே அவரது பிறந்த நாளுக்குப் பெரும் பாராட்டுதலாகும். ஆலயங்களின் சீரான நிர்வாகத்துக்கு அவர் செய்துள்ள அரும் பணி சான்றோர்களின் ஆசியைப் பெற்றது. ஆட்சிமொழி விஷயத்தில் ஹிந்தி ஏகாதிபத்தியம் ஏற்படாமல் தமிழ் நாட்டின் நலன்களுக்காக அவர் திரமுடன் உழைத்துத் தமக்கும் தாயகத்துக்கும் பெருமை தேடிக் கொண்டு நீண்ட காலம் வாழ வேண்டுமெனப் பிரார்த்திக்கிறோம்.

## சுதேசி ஏகாதிபத்தியம்

இந்திய சர்க்காரின் அந்நிய மந்திரியுடன் பேச்சு வார்த்தை நடத்திய பின் இலங்கை சர்க்கார் ஒரு கூட்டறிக்கை வெளியிட்டிருக்கிறது. இதைப் படித்த பின் பரிகாசம் செய்வதா, பரிதாபம் கொள்வதா என்றே தெரியவில்லை. மக்களின் சுய நிர்ணய உரிமைக் கொள்கையை இலங்கை மதிக்கிறது என்பதாக இந்த அறிக்கையில் படித்தவுடன் நமக்கு உற்சாகம் உண்டாயிற்று. இலங்கைத் தமிழர்கள் தங்கள் விதியைத் தாங்களே நிர்ணயித்துக்கொள்ள வழி பிறக்கக் கூடும் என்று சிறிது நிம்மதி கொண்டோம். ஆனால் அடுத்த வாக்கியத்திலேயே இலங்கை சர்க்கார் நம்மைக் காலை வாரிவிடுகிறது. "சுய நிர்ணய உரிமை என்பதை ஒரு நாடு முழுவதற்கும் பூரணமாகத்தான் அமுலாக்க வேண்டும்; அந்நிய நாடுகளின் ஆதிக்கத்தில் உள்ள பிரதேசங்களில் மட்டுமே இந்த உரிமை அமுலாக வேண்டும்" என்று பெரிய நிபந்தனையை இலங்கை விதித்திருக்கிறது. அதாவது ஒரு நாட்டிலுள்ள சிறுபான்மையினர் அந்நாட்டின் பெரும்பான்மையோரின் பிடியிலிருந்து தப்பிச் சுயமாக முடிவுகள் எடுப்பதற்கு அனுமதிக்கக் கூடாது; அடிமை நாடாக உள்ள ஒரு நாட்டின் மக்கள் தொகை முழுவதுமாகத்தான் ஆட்சி புரியும் அந்நியரிடம் தங்கள் உரிமைகளை வலியுறுத்தலாமே யொழிய, உள்நாட்டுச் சிறுபான்மையினருக்கு இந்த உரிமை இல்லை என்று முடிவுகட்டி விட்டார்கள். சுய நிர்ணய உரிமை என்பது மனச்சாட்சியை ஒட்டிய ஒரு பொதுக் கொள்கை — ஒவ்வொரு வீட்டிலும், ஒவ்வொரு ஊரிலும், உள்நாட்டிலும், வெளி நாட்டிலும் பொருந்தும் கொள்கை — என்பதைக் கூட்டறிக்கை ஒப்புக் கொள்ளவில்லை. மக்களின் சுதந்திர உரிமை என்பது மேல் நாட்டு ஆதிக்கத்தை எதிர்த்துப் பிரசாரம் செய்ய உதவும் ஒரு ராஜதந்திர சூத்திரம் என்றே இலங்கை சர்க்கார் நினைக்கிறது. இதற்கு இந்திய சர்க்காரின் பிரதிநிதியாக நமது அந்நிய விவகார மந்திரியும் ததாஸ்து பாடியிருக்கிறார். ஈழத் தமிழரின் உரிமைகளுக்கு மதிப்புக் கொடுக்காத அந்நாட்டுச் சர்க்காரும், காச்மீர மக்களின் உரிமைக்கு மதிப்புக் கொடுக்காத நம் நாட்டுச் சர்க்காரும் இப்படிப்பட்ட ஓர் அறிக்கை விட்டிருப்பது பொருத்தம்தான்! இலங்கை சர்க்

# கந்தன் கருணை

முருகப்பெருமானின் அமுதசரிதமாகிய
கந்த புராணத்தைத்

## திருமுருக கிருபானந்த வாரியார்

**கல்கி** வாசகர்களுக்குத் தொடர்
கட்டுரைகளாக அளிக்கிறார்



**கந்தர் சஷ்டியை ஒட்டிய**
**நவம்பர் 8ந்தேதி**
**இதழில் ஆரம்பமாகிறது**





கார் தங்களுக்குச் செய்யும் பட்சபாதங்களைக் கண்டு பொருமும் ஈழத் தமிழர்கள் தங்களுக்கெனச் சுதந்திரங்கள் கோருவதை நம் அந்நிய மந்திரி கண்டு கொள்ளாமலே 'மேம்போக்காக' இருந்து விட்டார். இதற்குப் பிரதியாக ஈழத்துச் சர்க்காரும் காச்மீரப் பிரச்னை விஷயமாக 'நடுநிலைமை' வகித்து விட்டது. இவை இரு நாடுகளுக்கும் 'ராஜதந்திர' வெற்றிகளாகும்.

அஹிம்சையும், ஜீவாதார சுதந்திரங்களும், சுய நிர்ணய உரிமையும் வெறும் ராஜதந்திரக் கருத்துக்களல்ல. அவை மனித ஜன்மாவின் புனிதத் தன்மையை மதிக்கும் அடிப்படைத் தத்துவங்களாகும். அந்நிய ஆதிக்கத்தைப் போலவே, உள்நாட்டு மெஜாரிட்டியின் ஆதிக்கத்தை எதிர்ப்பவர்களுக்கும் இந்த உரிமைகளை வழங்க வேண்டும். ஒரு விதத்தில், அந்நிய ஆதிக்கத்தை விட உள்நாட்டு மெஜாரிட்டியின் கொடுமைகள் அதிகத் துயரம் தருபவை எனலாம்.

உள்நாட்டு மெஜாரிட்டி ஆதிக்கத்தில் அவதியுறும் சிறுபான்மையினரின் குறைகள் பரிகாரம் இல்லாத நிரந்தரமான சோகக் கதையாகிறது. உள்நாட்டு விஷயம் என்ற பேரில் சிறுபான்மையினருக்கு உலக நாடுகள் ஆதரவு தருவதும் தடுக்கப்படுகிறது. அந்நிய ஆதிக்கத்தை ஒரு நாட்டு மக்கள் எதிர்க்கும்பொழுது உலக நாடுகள் இந்த அளவுக்குத் தயங்காமல் தார்மீக ரீதியில் ஆதரவு தர முன்வருகின்றன. மேலும் 'அந்நியர்' என்ற பொதுவான எதிராளிகள் இருக்கும்போது ஒரு நாட்டின் எல்லா இனங்களும் ஒற்றுமையாக இணைந்து சுதந்திரத்துக்காகச் செயல்படுகின்றன. அவற்றின் ஒத்துழைப்பால் சுதந்திரம் பெற்ற பின், சுதேசி மெஜாரிட்டியின் ஆட்சி ஏற்படும் போதோ இன பேதங்கள் தலைதூக்குகின்றன. அதைத் தொடர்ந்து பல தீமைகளும், அதர்மங்களும் தோன்றுகின்றன. அந்நிய ஆட்சியில் எது கொடுங்கோன்மை என்று சொல்லப்பட்டதோ அதுவே இப்போது ஜனநாயகத்துக்குகந்த 'பெரும்பான்மைக் கருத்து' என்ற அவதாரம் எடுத்துக் கௌரவம் பெறுகிறது. தனி மனிதனின் சுயநிர்ணய உரிமை உள்நாட்டு விவகாரங்களுக்குச் சம்பந்தமில்லாத விஷயமென்றும், அந்நியராட்சிக்கு மட்டுமே தொடர்புள்ளது என்றும் கருதுமளவுக்கு அவிவேகம் முற்றி விடுகிறது.

ஒரு நாட்டுக்குள்ளேயே தோன்றிய சிறிய ஏகாதிபத்தியத்தின் கொடுமை பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் கொடுமைக்குச் சற்றும் தாழ்ந்ததல்ல. ஏகாதிபத்திய அரசுகள் எவ்வளவு தீமைகள் இழைத்தாலும் ஒருசில நன்மைகளையும் அடிமை நாடுகளுக்கு அளித்துள்ளன என்பதை யாரும் மறுக்கமுடியாது. சுதேசிகளான அல்ப ஏகாதிபத்தியவாதிகளோ தாங்கள் செய்யும் கொடுமைக்கு ஈடாக எந்த நன்மையும் செய்வதில்லை.

---

# சிவராஜ் மறைவு

குடியரசுக் கட்சித் தலைவர் திரு என். சிவராஜ் அவர்களுடைய மறைவில் ஹரிஜன சமூகம் தனது நீண்ட காலத் தொண்டர் ஒருவரை இழந்துவிட்டது. 'பொன் போன்ற நடத்தையுள்ளவர், திறமிக்க ஹரிஜனத் தலைவர்' என்று ராஜாஜி கூறியதில் சிவராஜின் முழுப் பெருமையும் பொதிந்துள்ளது. அரசியல் வாதிகளிடையே நன்னடத்தையும் தீரமும் குறைந்து வரும் நிகழ் காலத்தில் சிவராஜ் அவர்கள் ஒரு பழைய மெய்த் தொண்டராக விளங்கி வந்தார்.

சிவராஜ் அவர்கள் சீரிய நீதி உணர்வும், தன்மான உணர்ச்சியும் பெற்றிருந்தார். ஹரிஜனங்களுக்குச் சட்ட சபையில் தனி ஸ்தானம் ஒதுக்கும் வழக்கத்தை நீடித்தால் அவர்களுடைய தாழ்மை உணர்வு நீடிக்கும், அவர்களை அரசியல் சொக்கட்டானில் பாய்ச்சிகைகளாக ஆடும் வழக்கம் நீடிக்கும் என்று கருதிய சிவராஜ் சென்ற தேர்தலின் போது ஒதுக்கப்பட்ட ஸ்தானத்தில் போட்டியிடாமல், பொதுத் தொகுதியில் போட்டியிட்டது அவரது ஜனநாயகப் பண்புக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

சென்னை மேயராகவும், மேல் சட்டசபையாளராகவும், பார்லிமெண்ட் அங்கத்தினராகவும் பல துறைகளில் பொதுச் சேவை செய்து புகழ் எடுத்தவர் திரு சிவராஜ். அவரது மறைவினால் வருந்தும் ஸ்ரீமதி மீனம்பாள் சிவராஜுக்கு நம் மனமார்ந்த அநுதாபங்கள்.



## திருச்சித் திருவிழா

சென்ற மாதம் 26, 27 தேதிகளில் திருச்சியில் நடைபெற்ற சுதந்திரக் கட்சி மகாநாடு சுதந்திர மகோத்சவமாக நிறைவேறியது. மகாநாட்டு நிர்வாகிகள் மிகவும் சீரிய முறையில் விழாவை நடத்தி வைத்து நற்பெயர் பெற்றனர். ஆயிரத்து இருநூறு பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். சுமார் சகாயிரம் பேர் கட்டணம் செலுத்தி அநுமதி பெற்றனர். 27ந் தேதி மாலை நடைபெற்ற பொதுக் கூட்டத்தின் பிரம்மாண்டமான மக்கள் திரள் குழுமியிருந்தது.

மகாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இவற்றில் ஒன்று, ருஷியாவுடன் இந்திய சர்க்கார் செய்துகொண்டுள்ள ராணுவ ஏற்பாட்டைக் கண்டிக்கிறது. நிர்வாகம், பாதுகாப்பு ஆகிய துறைகளில் கம்யூனிஸ ஊடுருவல் நிகழ இந்த ஏற்பாடு இடமளிக்கும் என்று தீர்மானம் எச்சரிக்கிறது. தென்கிழக்காசியாவில்—முக்கியமாக, மலேஷியாவில்—நிகழ்ந்துவரும் கம்யூனிஸப் பரவலைப் போதிய முறையில் சர்க்கார் கண்டிக்கவில்லை என வேறொரு தீர்மானம் கூறியது. நேரு அவர்களின் உருவம் பொறித்த நாணயங்களை வெளியிடுவது ஒரு குறிப்பிட்ட கட்சிச் சார்புடைய திட்டமென்றும், பார்லிமெண்டிலுள்ள எதிர்க் கட்சி அங்கத்தினர்களின் ஏகோபித்த ஆதரவு இல்லாவிடில் இந்தத் திட்டத்தைக் கைவிட வேண்டும் என்றும் ஒரு தீர்மானம் கோரியது. நிலச் சட்டத்தைச் சீர்திருத்துவதும், பண வீக்கத்தைக் குறைப்பதும்தான் உணவுப் பண்ட விலைவாசிகளைக் கட்டுப்படுத்துமென்றும், வியாபாரிகள் மீது நடவடிக்கை எடுப்பதால் பிரச்னையைத் தீர்க்க முடியாதென்றும் இன்னொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பற்பல மந்திரிகளின்மீது ஊழல் புகார்கள் வந்து கொண்டே இருப்பதால் நிர்வாகத்தில் மக்களுக்கு நம்பிக்கை உண்டாக்குவதற்கு ஏற்ற வழிவகைகளை ராஷ்டிரபதி அவர்கள் ஆராய வேண்டும் என ஒரு தீர்மானம் கேட்டுக் கொண்டது.

**படங்கள்:** 1. வரவேற்புக் குழுப் பொதுச்செயலாளர் திரு ெ. முத்துசாமி பேசுகிறார். மேடையில் ஸ்ரீமதி லோபோ பிரபு, சா. கணேசன், லோபோ பிரபு, ராஜாஜி ஆகியோர். 2. திரு எஸ். எஸ். மாரிசாமி பேசுகிறார். பிரதிநிதிகள் குழுமியிருக்கிறார்கள். 3. ராஜாஜியுடன் லோபோ பிரபு ஆலோசனை. 4. வரவேற்புக் குழுத் தலைவர் திரு சுப்பையா செட்டியார். 5. ஜயபுரி மகாராணி காயத்ரிதேவியும், கோண்டா வீரர் தாண்டேகரும். 6. விழாக் குழு பொக்கிஷதார் டாக்டர் காளமேகம் ஸ்ரீமதி காயத்ரி தேவிக்கு வரவேற்புப் பத்திரம் வழங்குகிறார்.



# அறிந்தீர்களா? இதுதான் உங்கள் பனாமா




1 தேர்ந்தெடுத்த வர்ஜீனியாப் புகையிலைகளின் கலவைப் பலனாக தண்மையான புகைநயம்—அதுவே உங்கள் பனாமா !

2 நாடெங்கும் நல்லின்பம் பரப்பும் மக்கள் ரகமாகிய பனாமா ஒத்த இனத்திலே உன்னத விற்பனையுள்ள ரகமாகும்.

3 நாட்டின் பல பகுதிகளிலே தலைசிறந்த ரகமாகத் திகழுவதும் உங்கள் பனாமா.

4 இன்று மக்கள் மனங்கவர்ந்துள்ள இருபதடங்கிய உறையினைப் பல்லாண்டுகளுக்கு முன் தோற்றுவித்த ரகமே பனாமாதான்.

உயரிய
பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும்
உகந்தது
பனாமா

கோல்டன் டொபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட். 

பம்பாய்.58

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது

GT. (P) 635 A TH Greens' Advtg.

# கிரிக்கெட் குமார்

சாமா



அதான் சிக்கீட்டது! அங்கிருந்து 'விக்கெட்' இருக்கான்னு தெரியல்லே! ...இருக்கு... இனிமே நான் 'போல்' பண்றேன்!




அம்பயர்! H.B.W ஒண்ணா?




மாட்சுக்கு டிக்கட் வாங்கிய வாண்டுப் பயலின் பயங்கரக் கனவு....!




“என்ன டாக்டர் இந்த மருந்து ஜுரம் ஊரில் இருக்கா? இன்னும் ஒரு வாரம் நீடிக்குமா?”
“ஏனோ! கிரிக்கட் மாட்சுக்கு லீவு போடவா?”




பின்னே யாரோ! மாட்சுக்கு டிக்கட்டெல்லாம் வாங்கியாச்சு! கிரிக்கட் ஆட்டக்காரர்கள் இருபத்திரண்டு பேருக்கும் டிங்கு ஜுரம் வராமலிருக்க வேண்டும்!

# காஞ்சியில் கலைவிழா

**எம். எஸ். சிவஸ்வாமி**

'நகரேஷு காஞ்சி' என்று தொன்மைப் புகழ் பெற்ற காஞ்சி மாநகரத்தின் பெருமை சரித்திரப் பிரசித்தி பெற்றது. கலை வளர்த்தது காஞ்சி. சமயம் தழைத்ததும் காஞ்சியில். ஆலயங்கள் நிறைந்தது காஞ்சி. புராதனப் பெருமைக்கும் மேலான நிகழ்காலப் பெருமையை இந்நகருக்கு அளித்து வருகிறார் ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள். இந்நகர மாந்தர்களைச் சென்ற மாதம் 22ந் தேதி முதல் 27ந் தேதி வரை ஒரு வார காலத்துக்குப் பல்லவச் சக்கரவர்த்திகளின் மகோன்னதமான கலைச் சகாப்தத்துக்கே அவர் அழைத்துச் சென்றார் என்றால் மிகையாகாது.

மூன்றாவது ஆகம, சில்ப, வியாஸ, பாரத புராதனக் கலை விழா வைபவமும் கண்காட்சியும் நடைபெற்ற ஏழு தினங்கள் காஞ்சி நகரம் விழாக் கோலம் கொண்டு காட்சியளித்தது. அன்னதானத்துக்குப் பெயர் பெற்ற கங்காபாய் சத்திரத் தோட்டம் அலங்காரப் பந்தல் அழகிலும், ஆன்றோர் கலை அரவணைப்பிலும் புது மெருகு பெற்றுப் பொலிந்தது. கேட்பாரற்றுக் கிடந்த ஆகமச் சுவடிகளும் சில்ப சாஸ்திர ஏடுகளும் மூலைகளிலிருந்து எடுக்கப்பட்டுத் தூசி போக்கிப் புரட்டிப் பார்க்கப்பட்டன. மதிப்புக் குன்றி வரும் சிவாச்சாரியர்களும், பட்டாச்சாரியர்களும், சில்பிகளும், நாட்டுக் கலை விற்பன்னர்களும் தமக்கும் நல்ல காலம் பிறந்து விட்டது என்று களிப்பெய்தினர். சைவமும் வைணவமும் ஒரு மேடையில் வீற்றிருந்து ஆகம விஷயங்களில் விவாதங்களும் ஆராய்ச்சிகளும் நடத்தின. சிற்பிகள், தங்கள் பரம்பரைச் சொத்து என்று பேணி வந்த கலைக்கு அழிவில்லை என்று உவகை கொண்டனர். நாட்டுப்புறத்துக் கலைகள் நகர மக்களை மகிழ்விக்கக் குதூகலத்துடன் எழுந்தன.

ஆகமச் சுவடிகளைச் சுமந்து மூன்று யானைகள் கம்பீரமாக மூன்று மைல் வலம் வந்து விழாப் பந்தலை அடைந்ததுமே விழாவுக்குத் தெய்விகச் சூழ்நிலை ஏற்பட்டு விட்டது. கலை வளர்த்துப் புகழெய்திய மைசூர் மன்னர் பரம்பரையில் வந்தவரும், தாமே உன்னத இலக்கிய - இசைக் கலைஞருமான சென்னை மாநில கவர்னர் ஸ்ரீ ஜயசாமராஜேந்திர உடையார் விழாவைத் தொடங்கி வைத்தார். 'நமது சில்ப சாஸ்திரம் பண்டைய அறிவு நூல்களில் ஒன்று. கட்டடக் கலையைப் பற்றியும், ஆலய நிர்மாணம் பற்றியும் அவை சொல்லுகின்றன. நாடு முழுவதற்கும் பொதுவான விதிகளால் தேச ஒற்றுமையை அவை வளர்த்தன' என்று உற்சாகத்துடன் பேசி விழாவுக்குத் தக்க பின்னணியை அமைத்துத் தந்தார். ஆஸ்திகத்திலும் ஆன்மிகத்திலும் அந்தரங்கமான ஈடுபாடுள்ள முதல்மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் ''மக்களின் மனச் சாந்திக்கும் க்ஷேமத்துக்கும் ஆன்மிக மறுமலர்ச்சி இன்றியமையாதது'' என்று கூறி நிகழ்ச்சிகளுக்கு அஸ்திவாரம் அமைத்தார். ஸ்ரீ ஜகத்குரு மக்களுக்கு நல்லொழுக்கம் எவ்வளவு முக்கியம் என வலியுறுத்தி அமுதமொழி அருள்மாரி பெய்தார்.

## சாஸ்திர ஆராய்ச்சிகள்

விழா நடந்த நாட்களில் காலை வேளைகளில் ஆகம சாஸ்திர விஷயாலோசனைகள் நடைபெற்றன. இவற்றில் தான் எத்தனை விதங்கள்? எத்தனை உட்பிரிவுகள்? எத்தனை விஷயங்கள்? எத்தனை பண்டிதர்கள் பங்கு கொண்டனர்?

உஷத்கால பூஜா விதிகள் பற்றியும், கால சந்தி சிவாகமங்கள் பற்றியும் பலர் பேசினார்கள். ஆறு கால பூஜா விதிகளைத் தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த திரு சுவாமிநாத சிவாச்சாரியார் விளக்கினார். ஷோடசோபசாரம் பற்றியும் நித்ய ஆராதனை பற்றியும் பக்ஷிதீர்த்தம் ஸ்ரீ சந்திரசேகர சிவாசாரியார் விளக்கினார். பாஞ்சராத்ர ஆகம விஷயங்கள் பற்றி மீஞ்சூர் ஸ்ரீ சேஷ பட்டாச்சாரியார், ஸ்ரீவில்லிபுத்தூர் அலங்கார பட்டாச்சாரியார் மற்றும் பலரும் விவாதித்

ஸதஸை யொட்டி நடைபெற்ற கண்காட்சியில் சில சிலைகள்



தனர். பிரம்மோற்சவம் எத்தனை நாட்கள் செய்ய வேண்டும்? அதற்கு ஏற்றுக் கொண்டு நாள், நட்சத்திரம், லக்னம் முதலியன கணிக்கப்பட வேண்டும்? அர்ச்சகர்கள் தீக்ஷை பெற்று உற்சவம் நடைபெற்றுக் கொண்டிருக்கையில் திட்டு ஏதாவது தோஷங்கள் சம்பவித்தால் என்னென்ன பரிகாரங்கள் செய்ய வேண்டும்? விமான ஜீர்ணோத்தாரணம் நடைபெறும் போது எந்தெந்தச் சமயங்களில் "பாலாலயப் பிரதிஷ்டை" செய்யவேண்டும்? இது போன்ற பல்வேறு விஷயங்கள் தக்க ஆதாரத்துடனும், ஆராய்ச்சி ஆர்வத்துடனும் விவாதிக்கப் பட்டன. விவாதங்களின் போது இரண்டு முக்கிய விஷயங்கள் தெளிவாகத் தெரிந்தன. சிவாகமங்களிலும் வைணவ ஆகமங்களிலும் பல அம்சங்களில் ஒற்றுமை இருந்தது. சாஸ்திரங்கள் வளைந்து கொடுக்கும் தன்மையுடையனவாய் இருப்பதும் வெளிப்பட்டது. சாதாரண மக்கள் கூட நடு நடுவே கேள்விகள் கேட்டுத் தங்களுடைய சந்தேகங்களையும் தீர்த்துக் கொண்டனர். மக்களிடையே ஆலய வழிபாட்டுச் சம்பந்தமான விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள எவ்வளவு ஆர்வம் இருக்கிறதென்று நன்கு வெளிப்பட்டது.



சில்ப சாஸ்திர விஷயாலோசனையில் பொன்னாச்சி திரு அமிர்தலிங்க ஸ்தபதி, மகாபலிபுரம் திரு கணபதி ஸ்தபதி, பழனி திரு செல்லக்கண்ணு ஸ்தபதி, சென்னை திரு கௌரி சங்கர் ஸ்தபதி போன்ற பலர் கலந்து கொண்டு, "ஆயாதி லக்ஷணம்", "ஆலய இசயோனி", "மானுஷ்யமானம்", "சிவாலயத்தில் தேவி கோட்ட நிர்மாணம்" போன்ற பல விஷயங்களைப் பற்றிப் பேசினர். இவர்களுடைய ஸம்ஸ்கிருத மொழி அறிவும், மன ஈடுபாடும், மரபிலுள்ள மதிப்பும் மிகவும் போற்றத் தக்கதாக இருந்தன. ஸ்தபதிகள் முன்காலத்தில் மிகவும் கௌரவிக்கப்பட்ட உயர்நிலையில் இருந்தார்கள் என்பது அவர்களுடைய ஆராய்ச்சியிலிருந்து நன்கு புலப்பட்டது.

பிற்பகல்களில் நடைபெற்ற சொற்பொழிவுகளெல்லாம் மிகுந்த ஆராய்ச்சித் திறனுடன் பரிமளித்தன. ஸ்ரீ டி. என். ராமச்சந்திரன் படங்கள் மூலம், ஆலயங்கள் வளர்ந்த கதையைச் சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்து பல்லவ சோழ ராஜாக்கள் காலம் வரையில் ரசமாக விளக்கி வைத்தார். கோபுர தேவதைகள் பற்றி ஸ்ரீ எஸ். ஆர். பாலசுப்பிரமணிய அய்யர் பேசினார். தமிழ் நாட்டில் ஆகம சாஸ்திரங்கள் தோன்றி விக்ரஹங்களின் வார்ப்பு முதலிய நுணுக்கங்கள் வரையறை செய்யப்படாத காலத்தில், அதாவது நான்காவது ஐந்தாவது நூற்றாண்டுகளில் கோவில்களின் மூர்த்திகள் எப்படி இருந்தன என்பதைப் பற்றித் தொல்பொருள் ஆராய்ச்சி இலாகாவைச் சேர்ந்த ஸ்ரீ கே. வி. சுந்தரராஜன் பேசினார். இந்தியாவில் சுமார் முப்பது ஆண்டுகளாகத் தங்கி இந்திய சிற்பக் கலையில் போற்றத்தக்க ஆராய்ச்சிகளை நடத்திப் புத்தகமும் வெளியிட்டுள்ள குமாரி ஆலிஸ் போனர் என்ற ஸ்விட்ஜர்லாந்து மாது (இவரும் ஒரு சிற்பி) நம் நாட்டுச் சிற்பக் கலையின் பெருமையைப் பற்றி உயர்வாகப் பேசினார். "சிற்பங்களை வெறும் அழகுப் பொருளாகக் கருதாமல் அவற்றுக்குப் புராதன காலத்திலிருந்த தெய்வீகத் தன்மையை மீண்டும் அளிக்க வேண்டும்" என்று அவர் வற்புறுத்தினார். அவருடன் ஒத்துழைக்கும் ஒரிஸ்ஸா ராஜ்யத்தைச் சேர்ந்த பண்டித சதாசிவ சர்மா, "சில்ப சாரணி", "சௌக்திக ஆகமம்" என்ற அபூர்வ சுவடிகளிலிருந்து கோனாரக்கிலுள்ள சூரியதேவன் ஆலயத்தின் நிர்மாண அளவுகள், யந்திரங்கள், முதலியவற்றை [illegible] படங்கள் மூலம் விளக்கி வைத்தார். இவற்றிலிருந்து இந்த ஆலயம் சிதிலமாகப் போனாலுங்கூட அதே போல் புனர்நிர்மாணம் செய்ய முடியும் என்று தோன்றியது. சில்பசாரணி என்ற நூற்பது பனையோலை கொண்ட சுவடியைப் புத்தக வடிவில் வெளியிட அவர் முயன்று வருவதாகத் தெரிகிறது. புதுவையில் உள்ள இந்திய கலாசாரக் கழகத்தைச் சேர்ந்த பிரெஞ்சுக்காரர் திரு ஜீன் பிலியோஸா "இந்திய யோகமும் மேலை நாடுகளும்" என்பதை விளக்கி, யோகாப்பியாசத்தின் போது உடலில் தோன்றும் இருதயத் துடிப்பு, சுவாச ஓட்டம் முதலிய மாறுதல்களை நுண்ணிய யந்திரங்களில் பதிவு செய்ய முடியும் என்றும் இந்திய யோகிகள் உள் உணர்வினால் கண்ட உண்மைகளை யந்திரம் மூலம் மேல் நாடுகளில் காண விழைகின்றனர் என்றும் விளக்கினார். காடர்கள், ஆதிவாசிகள் என்று நாம் கருதும் பழங்குடி மக்களிடையே காணப்படும் ஹிந்துப் பழக்க வழக்கங்களைப் பற்றி Servants of India Society யைச் சேர்ந்த ஸ்ரீ எஸ். ஆர். வெங்கடராமன் விரிவாக எடுத்துக் காட்டினார். சுப காரியங்களுக்கு

நல்ல நாள் பார்த்தல், நாமகரணம், கல்யாணம் முதலியன செய்தல், ராமாயணம், பாரதக் கதைகளில் பரிசயம், ராமர் கோவில்களைக் கட்டி வணங்குதல் முதலிய பல அம்சங்களில் நம்முடைய பழக்கங்கள் ஆதிவாசிகளிடம் இருக்கின்றன என்று அவர் குறிப்பிட்டார். புராதன காலத்தில் மன்னர்கள் அந்தணர்களை இந்தப் பழங்குடி மக்களிடையே அனுப்பி, அவர்கள் நிலையை உயர்த்த முயற்சிகள் செய்தனர் என்றும் அவர் எடுத்துக் காட்டினார்.

ஆங்கிலத்தில் பேசப்பட்ட விஷயங்களை டாக்டர் வே. ராகவன் மொழிபெயர்த்து உதவினார்.

சரித்திரப் பிரசித்தி பெற்ற சிற்பங்களைப் படைத்த சில சிற்பிகள் பற்றித் தொல்பொருள் இலாகாவைச் சேர்ந்த திரு ஆர். நாகசாமி விஸ்தாரமாக எடுத்துரைத்தார். காவிரிப்பூம்பட்டினத்தில் நடத்தப்பட்டுவரும் புதைபொருள் ஆராய்ச்சியில் இதுவரை கிடைத்த பண்டைக்கால அரிய சிற்ப பொக்கிஷங்களைப் பற்றி அந்த இலாகாவைச் சேர்ந்த திரு எஸ். ஆர். ராவ் பேசினார். ஆங்காங்கே படத்துடன் சொல்லப்பட்ட விளக்கங்களும் தென்னிந்தியக் கோவில்கள் பற்றிய திரைப்படங்களும் நமது தேவாலயங்களின் சிறப்புக்களைக் கூட்டத்தினர் மனத்தில் பதிய வைத்தன.

ஸதஸின் நோக்கத்துக்கிணங்கப் புராதனக் கலைகள் மட்டுமே நாள்தோறும் இரவு வேளை நிகழ்ச்சிகளில் சேர்க்கப்பட்டிருந்தன. பாரதக் கதைப் பிரசங்கத்தை மூன்று நான்கு கோஷ்டியினர் செய்து காட்டி, இவற்றுக்கு இன்னும் ஜீவ களை இருக்கிறது என்பதை நிரூபித்தனர். வில்லுப் பாட்டுக்களில் எத்தகைய உணர்ச்சி வேகம் இருக்கிறது என்பதைப் பாரதியின் ''பாஞ்சாலி சபதத்தை'' நிகழ்த்திய ஹைதராபாத் சுப்புரி--ஹரிஹரன் கோஷ்டியாரும், ''சீதா கல்யாணம்'', ''வள்ளி கல்யாணம்'' நடத்திய சாத்தூர் பிச்சையப்பா கோஷ்டியினரும் நன்கு புலப்படுத்தினர். கரக ஆட்டத்தின் விறுவிறுப்பையும் லய வின்யாஸ வேலைப்பாடுகளையும் காவடி ஆட்டத்தின் நுட்பமான அழகுகளையும் மதுரை பெரியசாமி கோஷ்டியினர் வெளிப்படுத்தினார்கள். பொம்மலாட்டம் நம்மை எவ்வளவு கவரக்கூடும் என்பது கும்பகோணம் மணி அய்யரின் நிகழ்ச்சியிலிருந்து வெளியாயிற்று. முக்கியமாகக் குறிப்பிடவேண்டியது இந்தோனேஷியா நாட்டைச் சேர்ந்த சதுரங்க மாண்ட் கிசார்ட் நிகழ்த்திய ஹனும நடனமும் அவர் கேரளத்தில் சமீப காலத்தில் கற்றுக் கொண்டு தேர்ச்சியடைந்துள்ள ஓட்டம் துள்ளலும். ஆந்திரப் பிரதேசத்திலிருந்து வந்திருந்த கோஷ்டியினரின் புர்ர கதா நிகழ்ச்சியும், கன்னட ராஜ்யத்து யக்ஷ கானமும், ஒரிஸ்ஸா நாட்டு ''பாலா'' நிகழ்ச்சியும், கேரள நாட்டுச் சண்டமேளாவும், வெவ்வேறு ராஜ்யங்களில் மக்களுக்கு மகிழ்ச்சி யளிக்கும் கிராமிய நிகழ்ச்சிகள் முறைப்படி விருத்தியானால் எவ்வளவு சிறப்பாக மக்களைக் கவர்ந்து நல்வழிப்படுத்த முடியும் என்பதற்குச் சான்று கூறின. மொழி மாறுபாட்டினால் அர்த்த பாவத்தைப் பூரணமாக ரசிக்க முடியா விட்டாலும் நிகழ்ச்சிகளிலிருந்த ஜீவ களை எல்லோரையும் கவர்ந்தது.

பேச்சானாலும், பாட்டானாலும், ஆட்டமானாலும், கூத்தானாலும், எல்லாம் தெய்விகத்தை வளர்க்கும் கலைகளே என்பதைக் கணந்தோறும் நிலைப்படுத்தி நடைபெற்ற விழா கீழ்க்கண்ட நான்கு தீர்மானங்களை நிறைவேற்றிய பின் இனிது முடிந்தது:

1. மக்களுக்கு நன்னெறியைப் புகட்டவும், தர்ம மார்க்கத்தில் அவர்களை ஈடுபடச் செய்யவும், தமிழகம் தவிர இதர ராஜ்யங்களிலும் புராதனக் கலைவிழாக்கள் நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும்.

2. கிராமங்களில் மாரியம்மன், காளியம்மன், பிடாரி, பிள்ளையார், முதலிய கோவில்களில் நடைபெற்று வரும் பூஜா விதிமுறைகளைப் பற்றித் தகவல்களைச் சேகரிக்கவும், பூஜைகளைச் செய்வோர் அவற்றைச் சரிவரச் செய்வதற்காக அவர்களுக்கு வகுப்புகள் நடத்தி, புத்தகங்கள் வெளியிட்டு, மானியங்கள் அளித்து உதவவும் நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

(3) தனிப்பட்டவர்களின் இல்லங்களில் நடைபெறும் விசேஷங்கள், விழாக்கள் போன்ற காலங்களில் பொம்மலாட்டம், நிழலாட்டம், பாரதப் பிரசங்கங்கள் போன்ற கிராமிய கலைகளில் ஈடுபட்ட குழுவினர்களைப் பயன்படுத்திக் கொண்டு அவர்களை உற்சாகப் படுத்தவேண்டும்.

(4) ஆகம, சில்ப சாஸ்திரப் பாடசாலைகள் நடத்துவது, ஆசிரியர்களுக்குச் சம்பளம் வழங்குவது, மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் அளிப்பது போன்ற செலவுகளுக்காக ஸமாஜ நிதிக்குத் தாராளமாக நன்கொடை அளித்து உதவத் தரும ஸ்தாபனங்களை ஸதஸ் கேட்டுக் கொள்ளுகிறது.

**அட்டைப்பட விளக்கம்**

விஜயதசமி தினத்தன்று சிறுவர் சிறுமியர் பள்ளிக்கு முதன் முதலாகச் செல்வதும், அந்த நன்னாளைப் பெற்றோர் விமரிசையாகக் கொண்டாடுவதும் பாரத நாட்டு வழக்கம்: நவராத்திரியை யொட்டி வெளியாகும் இவ்விதழ் அட்டையில் முதன் முதலில் இளம் சிறுமி 'அ - ஆ' எழுதி மகிழும் காட்சியை நம் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்துகிறார் ஓவியர் கல்பனா.

[ஸதஸில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் நாள் தோறும் அருளிய அமுத வாக்கின் சாராம்சத்தைத் தொகுத்துக் கோவையாக நேயர்களுக்கு அளிக்கிறோம். ஸதஸின் நோக்கத்தை விளக்கிப் பத்திரிகை நிருபர்களுக்கு அவர் பூர்வாங்கமாக வழங்கிய அருள்மொழிகளும் தொடக்கத்தில் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

ஸ்ரீ பெரியவர்களுக்கு ஒருபுறத்தில் வேத வேதாந்தங்களைக் காத்துத் தர வேண்டும் என்ற விசாரம்; மறுபுறம் பொம்மலாட்டத்தையும், கரக ஆட்டத்தையும் காத்துத் தரவேண்டும் என்றும் அதே அளவு விசாரம் — சர்வ ஜனங்களின் சீலத்தையும் வளர்க்க வேண்டுமானால் நம் நாட்டுப் பண்பின் சகல அம்சங்களையும் பேணி, அடுத்த தலைமுறைக்கு அளிக்கவேண்டும் என்று கருதும் 'எல்லார்க்கும் பொது'வான ஆசாரிய புருஷரின் இந்த வாக்குகளை வெறுமே படிக்காமல் செயலாக்கித் தரும் பாக்கியத்தை வாசகர்கள் பெறவேணும்.

— ஆசிரியர்]

நான் கிராமம் கிராமமாகப் போகிறேன். கிராமப் பொதுமக்கள், பாமரர்கள் பேசிக் கொள்வதை அடிக்கடி கேட்கிறேன். சிறுவர்கள் கூட "பொய் பேசக் கூடாது, திருடக் கூடாது, ஏமாற்றக் கூடாது" என்று ஒருவரையொருவர் திருத்திக் கொள்கிறார்கள். ஸ்திரீ ஜனங்கள் திரௌபதி, சீதை, சாவித்திரி போன்ற பதிவிரதைகளின் சரித்திரங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். உயர்ந்த பண்புள்ளவர்களாக இருக்கின்றனர்.

அவர்கள் எல்லோரும் கல்வி வாசனை சிறிதும் இல்லாதவர்கள். பள்ளிக்கூடம் போகாதவர்கள். அப்படியிருந்தும் அவர்களிடம் நல்ல பண்பு காணப்படுகிறது. இத்தகைய பண்பு அவர்களுக்கு எப்படி வந்தது என்று நான் ஆச்சரியப்படுவதுண்டு.

இந்தக் காலத்தில் பள்ளிப் படிப்பு, பத்திரிகைகள், திரைப் படங்கள், ரேடியோ இவை போன்ற சாதனங்கள் இருக்கின்றன. இவற்றின் மூலம் மக்களின் மனத்தை இஷ்டம் போல் மாற்ற முடிகிறது. அந்தக் காலத்தில் இவை இல்லை. எழுதத் தெரிந்தவர்கள் ஒரு சிலரே இருந்தார்கள். தெரியாதவர்கள்தான் அதிகம். எழுதத் தெரியாமலே தாசில் போன்ற உத்தியோகம் பார்த்தவர்களும் உண்டு. அவர்களுக்கு எந்தக் காரியமும் தடைப் படவில்லை. சாந்தம், சகிப்புத் தன்மை, நேர்மை, தெய்வ பக்தி, கஷ்டங்கள் நேர்ந்த காலத்திலும் மனம் சலியாமை, இம்மாதிரியான உயர் குணங்கள் அவர்களிடம் நிரம்பியிருந்தன.

ஜனங்களிடம் பண்பை வளர்க்கவும் மனத்தை நல்வழிப்படுத்தவும் அவர்கள் மேற்கொண்ட நாட்டு முறைதான் புராதன கிராமியக் கலைகள் என்று நாம் சொல்லும் பாரதக் கதைப் பிரவசனங்களும், அவற்றை யொட்டி நடைபெறும் கலை விழாக்களும். தருமராஜா கோவில், திரௌபதி அம்மன் கோவில், மாரியம்மன் கோவில், காளியம்மன் கோவில்களில் பாரதக் கதை சொல்லுவார்கள். ஒருவர் கேள்வி கேட்பார்; மற்றவர் பதில் சொல்வார். ராகத்துடன் கேட்க இனிமையாக இருக்கும். இப்படிக் கேள்வியும் பதிலுமாகப் பாரதக் கதைப் பிரசங்கம் நடைபெறும். திரள் திரளாக மக்கள் இதைக் கேட்பார்கள். பகலில் கேட்ட கதையை இரவெல்லாம் தெருக் கூத்தாக அவர்கள் ஆடுவார்கள்.

இதை மிகவும் அவசியம் என்று அவர்கள் கருதி வந்தார்கள். பண்டைக் காலத்தில் பாரதம் படிப்பதற்குத் தனி மான்யங்கள் விடப்பட்டிருந்தன என்று பல கல்வெட்டுச் சாசனங்கள் சொல்லுகின்றன. இக் கலைகளின் நோக்கம் மக்களிடம் பண்பை வளர்ப்பது. இதை நன்றாகவே அவை செய்து வந்தன.

இக்காலத்தில் இவற்றை நாட்டுப் பாடல்களென்று பாட்டுக்காக மட்டும் போற்றுகிறார்கள். பண்புக்காகப் போற்றுவதில்லை. இதனால்தான் படிப்புப் பெருகினாலும் பண்பு வளராத நிலையில் நாம் இருக்கிறோம்.

இந்தப் புராதனக்கலைகளெல்லாம் சர்க்கார் ஆதரவில்லாமல் நசித்துப் போகும் நிலைமையில் இருக்கின்றன. இவற்றை நசிக்க விடாமல் பாதுகாத்து வளர்க்க வேண்டும். இவற்றில் ஈடுபட்டுள்ள கலைஞர்களுக்கு உற்சாகம் அளிக்க வேண்டும் என்பதற்காகவே இந்த ஸதஸும் புராதனக் கலை விழாவும் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. இந்த நோக்கம் நிறைவேறப் பத்திரிகைகள் உள்பட எல்லோரும் பாடுபட வேண்டும்.

**நல்லொழுக்கம் வளர வேண்டும்**

முன்னாட்களில் இந்தியர்களுக்குத் தனி மதிப்பு இருந்து வந்தது. அவர்கள் உண்மை தவறாதவர்கள், தெய்வத்துக்குப் பயந்து நடப்பவர்கள், பேராசை இல்லாதவர்கள் என்றெல்லாம் கௌரவம் இருந்தது. இப்போது நிலைமை மாறிவிட்டது. சினிமாக் காட்சிகள் அதிகரித்து விட்டன. எங்கும் தீய பழக்கம் மேலிட்டு விட்டது. இந்த நிலை விசனத்தை உண்டாக்குகிறது.

நாடகத்தையோ, சினிமாவையோ நான் எதிர்க்கவில்லை. அவைகள் நடக்கட்டும். ஆனால் தன் கலையுடனேயே நாடகத்தில் அல்லது சினிமாவில் நடக்க வேண்டும்.

எந்தக் கலை நிகழ்ச்சியிலும் நன்னெறியும் ஒழுக்கமும் போதிக்கப்பட்டால் மக்கள் அவற்றைப் பார்க்கலாம். பாட்டுக் கச்சேரிகளில் கூட வெறும் கானத்துக்குப்

பிரதானம் கொடுக்கப்படுகிறது. சாகித்தியங்கள்தான் மனத்தில் பக்தியை உண்டாக்கும். அவற்றுக்கு முக்கியத்வம் தரவேண்டும்.

களியாட்டங்களில் உள்ள குறை ஆலய வழிபாட்டிலும் பிரவேசித்திருக்கிறது. கோயில்களில் என்ன நடக்கிறது என்பது சேவார்த்திகளுக்குத் தெரிவதில்லை. அர்ச்சகர்கள் கூடத் தங்கள் வேலையை யந்திரம் போலவே செய்து வருகின்றனர். பக்தி வளர வேண்டிய இடத்தில் கூட பக்தி வளருவதில்லை. அர்ச்சகர்கள் பூஜையின் பொருளைத் தெரிந்துகொண்டிருந்தால் அர்ச்சகர்களுக்கும் நல்லது. சேவார்த்திகளுக்கும் நல்லது. பக்தி வளரும். கோயில் திருப்பணிகள் கூடச் சிரத்தையுடன் நடைபெறும்.

### ஒற்றுமையை வளர்க்க ஒரு வழி

ஒவ்வோர் ஊரிலும் தேர்த் திருவிழா நடக்கிறது. பெரிய கோயில்களில் பிரம்மோற்சவத்தில் தேர் இழுத்தல் பெரும் புண்ணியமாகவே எல்லாக் குலத்தவராலும் கருதப்படுகிறது. ஆண்டவன் முன்பு எல்லா மக்களும் சமம் என்ற உயர் கருத்தை நடைமுறையில் நிலைநாட்டுவதற்கு ஏற்பட்ட விழா இது. மக்கள் சக்திக்குப் பதில் விசையுள்ள மோட்டார்களைக் கொண்டு தேரை இழுத்துக் கொண்டு நிலையில் சேர்ப்பது மிகவும் கஷ்டம்தான். சேவையும் குறைச்சல். ஆளும் பண்பு மறைந்து போகும். மக்களிடம் ஒற்றுமையை வளர்ப்பது என்ற உயர்ந்த கருத்துள்ள வழக்கம் மறைந்து விடும்.

கவலை தரக் கூடிய இதர விஷயங்களும் இருக்கின்றன. வேத சாஸ்திரங்களை முறையாகப் படித்துப் பயின்றவர்கள் தங்கள் பிள்ளைகளை அதே துறையில் பயிலுவிக்க விரும்புவதில்லை. தங்கள் தொழிலுக்குக் கௌரவமோ, போதிய திரவியமோ கிடைக்காததுதான் காரணம். சிவாச்சாரியார்களும் பட்டாச்சாரியார்களும் தங்கள் பிள்ளைகளை ஆங்கிலப் பாடசாலைகளுக்கு அனுப்பப் பிரியப்படுகிறார்கள். சில்பிகளின் நிலை இதைவிட மோசம்.

நினைக்கவே கஷ்டமாக இருக்கிறது. நாகரிகத்தின் சின்னங்கள் என்று நாம் கருதுபவை அனைத்தும் நாளா வட்டத்தில் மறைந்து போக வேண்டியதுதானா? அப்படி ஆகும்படி விடக் கூடாது. நாட்டுப்புற நடனங்களையும், மற்றக் கலைகளையும் மீண்டும் வளர்ச்சியடையச் செய்ய வேண்டும்.

### சாந்நித்யம் நிலவ உபாயங்கள்

இப்போதெல்லாம் ஆலயங்களைப் பரிபாலிப்பவர்கள் சர்க்காரும், மடாதிபதிகளும், எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்களும், அதாவது நிர்வாக அதிகாரிகளும் ஆலயப் பரிபாலனத்தில் பங்கு கொள்கிறார்கள். நிர்வாகம் நடத்தும்போது தெரிந்தோ தெரியாமலோ பலவித பாபங்கள் நேர்ந்து விடுகின்றன. இதற்குப் பயந்துதான் சிலர் "கோயில் மணியம் மட்டும் வேண்டாம்; மற்ற எந்த வேலையானாலும் பார்க்கலாம்" என்று சொல்வார்கள். தெய்வ அபராதம் வந்துவிடுமே என்ற பயம் அவர்களுக்கு. அப்படியானால் கோயில் நிர்வாகம் நடைபெறுவது எப்படி? பொறுப்புக்களை ஏற்கத்தான் வேண்டும். குற்றம் குறைகள் ஏற்படாமலிருக்கும்படியும் பார்த்துக் கொள்ள வேண்டும். தெரிந்தோ தெரியாமலோ ஏற்பட்ட குற்றங்களுக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும்.

குற்றம் குறைபாடுகள் ஏற்படாமலிருப்பதற்கு முக்கியமாகச் செய்ய வேண்டிய காரியம் ஒன்று உண்டு. நிர்வாக அதிகாரிகளின் ஆபீஸ்களைக் கோயிலுக்குள்ளே வைக்காமல் ஆலயத்துக்கு வெளியே வைத்துக் கொள்ள உடனடியாக நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும். கோயிலுக்குள் இருக்க வேண்டிய புனிதமான சூழ்நிலைக்கும் உத்தியோகச் சூழ்நிலைக்கும் ஒற்றுமை காண்பது முடியாத காரியம். அடுத்த ஆண்டுக்குள்ளாவது எல்லா ஆலயங்களிலும் ஆபீஸை வெளியில் வைத்துக் கொள்ள வேண்டும். இதற்காக அதிக செலவும் ஆகாது. ஒருவர் அல்லது இருவர் உட்கார்ந்து கணக்கெழுதப் போதுமான ஒரு சிறிய இடம் போதுமானது. இதைச் செய்து கொள்ளப் பணமில்லை என்று எந்தத் தேவஸ்தானமாவது சொன்னால் நிதி வசூல் செய்து கொடுக்க என்னாலானதைச் செய்கிறேன்.

நிர்வாக அதிகாரிகள் செய்ய வேண்டிய மற்றொன்றையும் சொல்கிறேன். நிர்வாகத்தில் ஏற்படும் குறைகளுக்குப் பிராயச்சித்தமாக ஒவ்வொரு எக்ஸிக்யூடிவ் ஆபீஸரும் தினந்தோறும் ஒரு கால பூஜைக்காவது சந்நிதியிலிருந்து தங்களுக்கு உபதேசமாகியிருக்கும் மந்திரங்களை ஜபித்துக் கொண்டிருக்க வேண்டும். மந்திரோபதேசம் இல்லாதவர்கள் பகவான் நாமாவைத் தியானம் செய்து கொண்டிருத்தல் வேண்டும்.

சேவார்த்திகள் தங்கள் மனத்தில் உள்ள தாபங்களைப் போக்கிக் கொள்ள கோயில்களுக்குப் போகிறார்கள். அங்கே குடிகொண்டுள்ள மூர்த்தங்கள் தெய்வ சாந்நித்யத்துடன் இருந்தால்தானே நமக்குச் சாந்தி அளிக்கும்? தெய்வ சாந்நித்தியம் விசேஷமாக வெளிப்படுவதற்கு ஆசாரமான சூழ்நிலை அத்தியாவசியமாகும். குளத்துத் தண்ணீரில் உடம்பின் அழுக்கைக் காட்டிலும் அதிக அழுக்கு இருந்தால் குளிக்கத் தோன்றுமா? ஆசாரத்தில் தோன்றும் சாந்நித்யத்துக்காகக் கோயிலுக்குச் சென்று அங்கே அதிக அநாசாரத்துக்கு ஆளாவது இது போலத்தான்.

நமது கோயில்களில்தான் எவ்வளவு அசுத்தங்கள் மலிந்து கிடக்கின்றன! மற்ற மதத்தினருடைய தேவாலயங்களில் இப்படியில்லை. அசுத்தம் செய்பவர்களைச் சேவார்த்திகளும் அதிகாரிகளும் அவ்வப்போது கண்டிக்க வேண்டும். இதற்காக இரண்டு அடிகள் பட வேண்டியிருந்தாலும் ஏற்றுக் கொள்ளலாம். புண்ணியம் உண்டு. எத்தனையோ அற்ப விஷயங்களுக்கெல்லாம் யார் யாரிடமோ அடிபடுகிறோம். வசை மொழிகளைக் கேட்கிறோம். தெய்வ காரியத்துக்காக இதைச் சந்தோஷமாகச் செய்யலாம். எதெதற்கெல்லாமோ சமத்துவம் வேண்டும் என்று சட்டமியற்றுகிறார்கள். கோயில்களைச் சுத்தமாக வைத்




## ஒரு தனிப்பட்ட வியாபாரி
## சென்னப்பன் பட்டினத்தில் இறங்குகிறார்

செயின்ட் ஜார்ஜ் கோட்டையும் அதைச் சுற்றி சிறு சிறு குடிசைகளடங்கிய சென்னப்பன் பட்டினம் மற்றும் வட சர்க்கார் பகுதிகள் அடங்கியதுதான் 1788ல் இருந்த சென்னை ராஜதானி. இந்த வருஷத்தில்தான் தாமஸ் பாரி என்பவர் இங்கிலாந்திலிருந்து அலுங்கிய ஐந்து மாத கப்பல் பிரயாணத்தை முடித்துக் கொண்டு, சென்னப்பன் பட்டினத்தில் இறங்கி, ஒரு தனிப்பட்ட வியாபாரியாக, பற்பல பண்டங்களின் விற்பனையில் ஈடுபட்டார்.

176 ஆண்டுகளுக்குப் பிறகு, தான் ஆரம்பித்துள்ள ஸ்தாபனம், தேசத்தின் பொருளாதாரத் துறையில் மேம்பட்ட வகைகளில் பெரும் பங்கு கொள்ளும் என கனவு கண்டிருக்கக் கூடுமோ? ரசாயன உரங்கள், சர்க்கரை, பீட்டர் நிறுவகள், தொழிற் துறைகளுக்குத் தேவையான ஆல்கஹால், கெமிகல்கள், ஆஸிட்கள் மற்றும் வாணிப சாமான்கள் தயாரிப்பதிலும், பயிர்களைப் பாதுகாக்கும் பண்டங்கள், இலேசான மற்றும் கனரக இயந்திரங்கள், மருந்துகள் தயாரிக்கும் பண்டங்கள், மற்றும் வீட்டு உபயோகத்திற்குத் தேவையான பண்டங்களை இந்தியா முழுவதும் வினியோகித்தல் மற்றும் இன்ஷூரன்ஸ், கப்பல் அலுவல்கள்.


THOMAS PARRY

இ. ஐ. டி. பாரி லிமிடெட், பாரி & கோ., லிமிடெட், மற்றும் பல துணை கம்பெனிகள், கூட்டுக் கம்பெனிகள் ஒருங்கே சேர்ந்த ஒன்பது ஸ்தாபனங்கள் கொண்டதுதான் இன்றைய இ. ஐ. டி.-பாரி குரூப். இந்த ஸ்தாபனம் 10,000 பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்கிறது.

தேசத்தின் பொருளாதாரத் துறையில் பூரண சுதந்திரம் அடையவும், மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் தன் முழு பங்கை உணர்ந்து இந்த ஸ்தாபனம் பொறுப்புடன் பணியாற்றுகிறது. நாளுக்கு நாள் வளர்ந்து வருவதுடன், வேலை வாய்ப்பு வசதிகளையும் அதிகம் தருகிறது.

## இ. ஐ. டி. - பாரி குரூப், மதராஸ்

**தேசத்தின் பாதுகாப்புப் பணியில் உங்கள் கடமையைச் செய்யுங்கள்**

FDS/PP/364

# காஷ்மீர் போக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும் புதுமையுடனும் இருங்கள்

உன்னதமான காஷ்மீர் போக்கே யின் தரம், ஒரு அழகுசாதன டால்க்... ஒரு குழந்தைக்கான பவுடர் இவ்விரண்டையும் அளிக்கிறது.

காஷ்மீர் போக்கே டால்க்கின் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தை நீங்கள் உணரும்பொழுது ஒரு பூச்செண்டிற்குள் இருப்பது போலவே தோன்றும். உடல் முழுவதும் தடவிக் கொண்டு அதன் ஊற்றுப்பெருக் கென எழும் புதிய நறுமணத்தில் திளைத்து மகிழுங்கள்



குழந்தையை இதமுடனும் சுகமுடனும் வைத்திருங்கள். காஷ்மீர் போக்கே, எந்த ஒரு விசேஷ குழந்தைக்கான பவுடரைப் போலவே, மிருதுவும் பட்டுப்போன்றதுமானது. நீங்கள் இருவருமே உபயோகிக்கக்கூடிய அவ்வளவு சௌகரியமான ஒரே பவுடர்!




# காஷ்மீர் போக்கே

டால்கம் பவுடர்—ஆடவ விரும்பும் சுகந்தமுள்ளது!

C.B.G-19-TAM.

இருக்கும் விஷயத்தில் ஒரு பொதுவான சட்டம் இயற்றினால் கூடத் தேவலை.

ஆலயங்களின் புனிதத் தன்மையைப் பாதிக்கும் அசந்தர்ப்பங்கள் அடிக்கடி நேர்ந்து விடுகின்றன. ஆசௌசம், வீட்டு விலக்கு இவை போன்ற தீட்டுகள் ஏற்படும் காலங்களில் கோயில்களுக்குள் பிரவேசிக்காமல் இருக்க வேண்டும். பலருக்கு இது தெரியவே இல்லை. ஏதோ எக்ஸிபிஷனுக்குச் செல்வது போல் ஆண்களும் பெண்களும் கூட்டமாகக் கோயில்களுக்கு வந்துவிடுகிறார்கள். இந்தத் தவற்றை அவர்களே உணர்ந்து திருத்திக் கொண்டால் நல்லது. எனினும் நிர்வாக அதிகாரிகளும் இவ்விஷயத்தில் சிறிது கவனம் செலுத்த வேண்டும்.

இப்படி நேர்ந்துவிடும் அசந்தர்ப்பங்களுக்குப் பரிகாரம் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. இது சுத்திப் பிராயச்சித்தம் போன்றது. இதைத் தினந்தோறும் உஷத்காலப் பூஜையுடன் பரிகாரமாகச் செய்துவிடலாம். இதற்காக விசேஷ சிரமங்கள் ஏதும் இல்லை.

நாம் சுதந்திரம் பெற்றுப் பதினேழு ஆண்டுகள் ஆகின்றன. சுதந்திரம் பெற்ற போது நம்முடைய நாட்டின் கௌரவமும் செல்வாக்கும் உயர்ந்துதான் இருந்தன. நம்முடைய சொல்லுக்கு நல்ல மதிப்பு இருந்தது. நம்முடைய நட்பைப் பெற வேண்டுமென்று எல்லா நாடுகளுமே போட்டி போட்டுக் கொண்டு வந்தன. ஆனால் இன்றைய நிலை என்ன? நம்மைக் காட்டிலும் சிறிய நாடு பாகிஸ்தான். அதைக் கண்டு நாம் பயப்பட்டுக் கொண்டிருக்கிறோம். சுற்றியுள்ள நாடுகளில் நமது மக்கள் படும் அவதிகளைக் கண்டும் அவர்களைக் கண்டிக்கக் கேட்கும் நிலையில் கூட நாம் இல்லை. இவ்வளவு பயம் நமக்கு ஏன் வந்தது? நம்மிடத்தில் தெய்வ நம்பிக்கை குறைந்திருப்பதுதான் இதற்கெல்லாம் காரணம். நம்முடைய தற்போதைய நிலையைப் பார்க்கும்போது இந்த அளவுக்காவது சுவாமி நம்மை க்ஷேமமாக வைத்திருக்கிறாரே என்று [illegible] வேண்டும். எங்கும் வியாபித்துள்ள ஊழல்கள் (கரப்ஷன்) நமது கோயில்களிலும் புகுந்து விட்டன. தேவாலயங்களில் ஊழலில்லாதிருந்தால்தான் தெய்வ சாந்நித்தியம் நிலவும். இதை நிலவச் செய்வது நமது கடமை.

கோயில்களிலுள்ள மூர்த்தங்கள் வெறும் சிலைகள் அல்ல. கலையழகுக்காக மட்டும் அவற்றைக் கண்டு களிக்க வேண்டுமானால் பொருட்காட்சிசாலைகளுக்குப் (மியூஸியத்துக்கு) போகலாமே. கோயில்களுக்குப் போக வேண்டாமே! ஆனால் நமது பண்பு அதுவல்ல. கலையழகுடன் தெய்வ சாந்நித்தியமும் ததும்பும் முறையில் நாம் செய்யும் எல்லாவற்றையும் ஈச்வரார்ப்பணமாகச் செய்து மேன்மை அடைந்தோம். அதே பண்புடன் ஸ்தானிகர்களும் அர்ச்சகர்களும் கோயில் திருப்பணிகளைச் செய்ய வேண்டும்.

## அர்ச்சகர்கள் உண்மைத் தியாகிகள்

அரசியல் துறையில் சிறை சென்றவர்களையும் போராட்டத்தில் ஈடுபட்டவர்களையும் தியாகிகள் என்று கூறி அவர்களுக்குச் சன்மானம் கூட வழங்கப்படுகிறது. ஆனால் உண்மையில் கோயில் அர்ச்சகர்களைத்தான் இக்காலத்தில் தியாகிகள் என்று சொல்ல வேண்டும். அவர்களுடைய வறுமையையும் பிறருடைய அலட்சியத்தினால் ஏற்படும் மனக் கஷ்டங்களையும் இக்கால வாழ்க்கை நிலைமையோடு சேர்த்துப் பார்த்தால் நமது ஆலயங்களில் அவர்கள் விளக்கேற்றி வைத்துக் கொண்டிருப்பதே சமூகத்துக்கு அவர்கள் செய்யும் சேவை. அவர்களுடைய கஷ்டங்களைச் சேவார்த்திகளும் நிர்வாக அதிகாரிகளும் உணர்ந்து அநுதாப உணர்ச்சியுடன் செயலாற்றினால் ஆலய வழிபாட்டின் தரமும் உயரும்.

## கோ சம்ரக்ஷணம்

முன்பு மேய்ச்சல் நிலங்களாக இருந்தவை யெல்லாம் இப்போது வீடு கட்டும் மனைகளாகவும், சாகுபடி நிலங்களாகவும் மாறிவிட்டன. பசுக்கள் எங்கே மேய்வது? அவை கஷ்டப்படுகின்றன. பசுக்களை ரக்ஷிக்கவேண்டும். கோயில்களில் அபிஷேகாதி காரியங்களுக்காவது சுத்தமான பால் வேண்டாமா? புட்டிப் பாலையும், பவுடர் பாலையும் கொண்டு அபிஷேகாதிகளைச் செய்தால் என்ன பயன் கிடைக்கும்? பயன் கிடைக்கா விட்டால் போகிறது. பாபம் கூடச் சம்பவிக்கும். வசதியுள்ள தேவாலயங்களில் குறைந்தது இரண்டு பசுமாடுகளாவது வளர்க்கவேண்டும். கோயில் பிராகாரங்களில் ஒரு பாதி நிலத்தில் பசுக்களுக்குத் தீனியாக அகத்திக் கீரையையும், மற்றப் பாதி நிலத்தில் பூமரங்களும் வைத்துப் பயிராக்க வேண்டும். புஷ்பச் செடிகள் மட்டும் வைத்தால் போதாது. ஓங்கி வளரும் பவள மல்லிகை, கொன்றை, மந்தாரை போன்ற மரங்களும் வைக்க வேண்டும். இரண்டு வருஷங்கள் கஷ்டப்பட்டு இவற்றைப் பயிரிட்டு விட்டால் பின்பு அவற்றைக் கவனிக்கத் தேவையில்லை. அர்ச்சகர்களுக்குப் [illegible]

சிரத்தைதான் முக்கியம். ஸ்வாமிக்கு வீரபத்ரன் என்று ஒரு பெயர் உண்டு. வீரத்துடன் கடமையைச் செய்பவர்களை ரக்ஷிப்பவர் என்று அதற்குப் பொருள். தெய்வ சாந்நித்யத்தை உண்டாக்குவதில் எல்லோரும் வீரர்களாக இருக்க வேண்டும்.

கோயில்களுக்கு வருவாய் பெருக வேண்டும் என்று இப்போதெல்லாம் ஸ்வாமி தரிசனத்துக்கு டிக்கட்டு வைத்துப் பணம் வசூல் செய்கிறார்கள். திருப்பதியில் ஜனக் கூட்டத்தைக் கட்டுப்படுத்துவதற்காக டிக்கட் வைத்திருக்கிறார்கள். அங்கே கூட இப்போது இம்முறை தளர்த்தப்பட்டு தர்ம தரிசனத்துக்கு அதிக நேரம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. மற்ற ஆலயங்களில் டிக்கட்டுகள் வைக்க அவசியமில்லை. பகவத் தரிசனத்துக்கு டிக்கட் வைப்பது நல்லதல்ல. இம்முறையை ரத்து செய்துவிட வேண்டும் என்று அதிகாரிகளுக்குச் சிபாரிசு செய்கிறேன். வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள இதர வகைகளில் யோசனை செய்யலாம்.

# கயல்விழி

## அகிலன்

**வி**ழா ஆரம்பமாயிற்று. குலோத்துங்கர் எழுந்து முக்கிய விருந்தினர்களுக்கும் சபையோருக்கும் வரவேற்புக் கூறிவிட்டு அன்றையவிழாவின் நோக்கத்தை விளக்கலானார்.

''விருதுப் பெயர்களுக்கும் பட்டங்களுக்கும் அப்பாற்பட்ட ஒரு பெரிய வீரரைக் கௌரவிப்பதற்காக நாம் இங்கு கூடியுள்ளோம். விருதுப் பெயர்களுக்கு ஆழமான பொருள் உண்டு: தனிமையான வலிமையுண்டு. எனது நீண்டகால வாழ்வில் நான் இதை உணர்ந்தவன். நமது விருந்தினருடைய இயற்பெயர் நரசிம்மன்தான். ஆனால் சோழ நாட்டு மக்களும் இவரை வீரசிம்மன் என்றே பெருமையோடு அழைத்து வருகிறார்கள். அதனால் இவரது வீரம் பன்மடங்கு வளர்ந்திருக்கிறது: இனியும் வளரப் போகிறது. பெயருக்கு முன்னால் உள்ள அந்த இரு எழுத்துக்களுக்கு எவ்வளவு மந்திர சக்தி வந்து விடுகிறது, பார்த்தீர்களா?''

சபை அதிரக் கரகோஷம் செய்தார்கள் சபையினர். பாண்டிய நாட்டுப் புலவனின் கரங்களை அப்போது சக்கரவர்த்தியும் நோக்கினார். பாமினியும் நோக்கினாள். அவனும் கைதட்டி ஒலி எழுப்ப மறக்கவில்லை.

''நமது இரு நாடுகளுக்கும் ஏற்பட்டுள்ள உறவு பன்னெடுங் காலத்துக்கும் பிரிக்க முடியாத உறவு. இரத்த சம்பந்தமாக இரண்டறக் கலந்த உறவு அது. எனது அருமைத் தங்கை சோழமாதேவியை மணந்திருப்பவர், இவருடைய தந்தையாகிய வல்லாள தேவர். என்னுடைய மைத்துனருடைய திருக்குமாரர் இவர். வல்லாள தேவருக்கு இதே மண்டபத்தில் நாம் 'சோழ குல காப்பாளர்' என்ற பட்டத்தை வழங்கியிருக்கிறோம். வெறும் பட்டமா அது? இது வரையில் நமது இரு சாம்ராஜ்யங்களுமே ஒன்றை ஒன்று காப்பாற்றி வளர்ப்பது என்று கங்கணம் கட்டிக் கொண்டு விட்டன. கோசல நாட்டுக்காக நாம் படைகளை அனுப்புகிறோம். அவர்களும் எப்போதுமே நமக்குத் துணை செய்யத் தவறியதில்லை. இந்த உறவை மேலும் வளர்ப்பதற்காகவே இந்த விழா நடைபெறுகிறது.''

பைந்தமிழ்க் குமரன் தெளிவாகப் புரிந்து கொண்டு விட்டான். 'புலவனே! நீ வெறும் பாட்டுப் பாடி ஓர் துரும்பையும் அசைக்க முடியாது! இரண்டு சாம்ராஜ்யத் தூண்களின் இணைந்துவிட்ட வலிமை எங்களுடையது!' என்று அவர் குறிப்பால் அவனுக்கு உணர்த்தினார்.

சக்கரவர்த்தியின் குரல் இப்போது முன்னிலும் கணீரென்று ஒலித்தது:

''எனக்கும் சரி, வல்லாள தேவருக்கும் சரி, வயதாகி விட்டது. ஆனால் எங்களுக்குப் பின்னாலும் இந்த உறவு வளர வேண்டும். இளவரசன் இராஜராஜனையும் நமது மாபெரும் சோழ சாம்ராஜ்யத்தையும் எனக்குப் பின்னால் வீரநரசிம்மன் கவனித்துக் கொள்வார்.''

மீண்டும் கையொலியும் வாழ்த்தொலியும் எழுந்தன.

''விருதுப் பெயர் ஏற்றதாக இருக்க வேண்டுமே என்று பல தினங்கள் ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். ஒரு நாட்டைக் காக்க வேண்டுமென்றால் பகைமையை அழிக்க வேண்டும். வல்லாள தேவர் காப்பாளராகிவிட்டார். ஆகவே, அவர் குமாரரோ நம்முடைய பகைமையை அழிப்பவராக இருக்க வேண்டும். நமக்கு உள்ள ஒரே பகை நாடு பாண்டிய நாடு. தலைமுறை தலைமுறையாகவே அது நம்மைப் பகைத்துக் கொண்டு வந்திருக்கிறது. பாண்டிய நாட்டு மக்களிடமோ, கலைஞர்களிடமோ, புலவர்களிடமோ



நமக்குச் சிறிதும் பகையில்லை: மன்னர்கள் சமயங்களில், மதங்கொண்ட யானைகளாகி விடுகிறார்கள். அப்படிப்பட்ட பாண்டிய யானையை அடக்க ஒரு சிங்கம் வேண்டும். அந்தச் சிங்கம் இந்த வீர நரசிங்கமே! — இந்தச் சிங்கத்துக்கு இப்போது நாம், 'பாண்டிய கண்டனன்' என்ற விருதுப் பெயர் சூட்டிப் பெருமையுறுவோம்!''

சபையினருக்கருகில் மலர்த் தட்டுக்களையும் மஞ்சள் கலந்த அரிசிக் குவியலையும் ஏந்திக் கொண்டு பணிப் பெண்கள் பலர் சுற்றி வந்தனர். மலர்களையும், அரிசியையும் கை கொண்டமட்டும் அள்ளி வீர நரசிம்மர் மீது பொழிந்தனர் சபையோர். மழையாகப் பெய்துகொண்டேயிருந்தனர். பைந்தமிழ்க் குமரன் மட்டிலும் ஆடாது அசையாது சிலையாக அமர்ந்திருந்ததைக் குலோத்துங்கர் கண்ணுற்றார். வீர நரசிம்மனின் புதல்விக்கு அந்தப் புலவனின் செய்கை கோபமூட்ட வில்லை. அவனுடைய துணிவுதான் அவளை வியக்க வைத்தது.



''வாழ்க, பாண்டிய கண்டனன்!'' என்று முழங்கினார் சக்கரவர்த்தி. எல்லாக் குரல்களுமே அந்தச் சொற்களை உற்சாகத்துடன் எதிரொலி செய்தன. பைந்தமிழ்க் குமரன் அதிலும் கலந்து கொள்ளவில்லை. சக்கரவர்த்தி அவனை மட்டும் கூர்ந்து நோக்குவதைப் பாமினி கண்டுவிட்டாள். அவளுக்கு ஏனோ அது அச்சத்தை விளைவித்தது! 'இத்தனை பேர்கள் நிறைந்த கூட்டத்தில் இவனுக்கு மட்டிலும் ஏன் இந்த மிடுக்கு? அதன் பலா பலனைத் துச்சமாக மதிப்பவன் போலிருக்கிறதே!'

கூட்டம் முடிந்து சபை கலைந்ததும் முதல் முதலில் எழுந்து நடந்தவன் அவன்தான். கண்ணுக்கு மறையும் வரையில் அவன் செம்பொன் மேனியையே பார்த்துக் கொண்டிருந்தாள் பாமினி.

மாளிகைக்குள் தீபங்கள் ஏற்றப் பட்டன. அகிற் புகை மீண்டும் மண்டபத்தில் நிறைந்தது. பைந்தமிழ்க் குமரனை அழைத்துச் செல்ல ஆளும் வந்து விட்டான்.

''சக்கரவர்த்திகள் தங்களைச் சந்திக்க விரும்புகிறார்கள்.''

''தனிமையில் இருக்கிறார்களா?'' என்று கேட்டான் புலவன்.

''வீர நரசிம்மரும் கோசல நாட்டு இளவரசியாரும் சக்கரவர்த்திகளுடன் இருக்கிறார்கள்.''

பல்வேறு உணர்ச்சிகள் அலைமோத அதை முகத்தில் காட்டிக்கொள்ள விரும்பாதவன்போல், ஏடும்கையுமாக எழுந்து நடந்தான். அங்கு தனக்கு என்ன காத்திருக்குமோ என்ற தவிப்பு ஒரு புறமும், எதுவாக இருந்தாலும் சரி என்ற முனைப்பு மறுபுறமும் போராட அவன் அந்தப் பிரம்மாண்டமான அரண்மனையின் வசந்த மண்டபத்துள் புகுந்தான்.

### பதினான்காம் அத்தியாயம்

## சொல் முனையும் வாள் முனையும்

அரண்மனைப் பூங்காவுக்குள்ளிருந்த வசந்த மண்டபத்தை நோக்கிப் பைந்தமிழ்க் குமரன் வந்து கொண்டிருந்த போது அங்கிருந்து எழுந்த மெல்லிய யாழிசை குளிர் தென்றலில் மிதந்து வந்து அவனை வரவேற்றது. நறுமண மலர்களின் சுகந்தமும் யாழின் இன்னிசையும் அவனது உள்ளத்தின் பரபரப்புக்கு அருமருந்தாக இருந்தன. தூண்டா மணி விளக்குகளின் ஒளிவெள்ளம் அந்த மண்டபத்தை அடுத்திருந்த செய்குளத்தில் பிரதிபலித்து, அதை ஒரு மிதக்கும் தெப்பமோ என்று மதி மயங்கச் செய்தது.

நுழைந்தவுடன் பைந்தமிழ்க் குமரனுக்கு ஒரு கலைவாணியின் உருவம் தென்பட்டது. அதன் கரங்களில் மகர யாழைக் கண்டவுடன் அவன் தன்னையே ஒரு கணம் மறந்தான். மகர யாழ், மகரக் குழை, மகரக் கொடி முதலியவற்றை மற்றவர்கள் எப்படி நோக்கினாலும் அவனுக்கு மட்டிலும் அவற்றில் தனியானதோர் உட்பொருள் தெரிந்தது. மீனட்சியின் மைந்தனை மீனக் கொடியோனல்லவா? மீனின் உருவமோ, பெயரோ சின்னமோ, கொண்ட எந்தப் பொருளும் அவனைத் தன்னிடம் ஈர்த்தது.

குலோத்துங்கர், வீர நரசிம்மன், இராஜராஜன், பாமினி ஆகிய நால்வருக்குமே கரங்கூப்பி வணங்கி விட்டு அவனுக்காகப் போடப்பட்டிருந்த திண்டில் சாய்ந்தான் பைந்தமிழ்க் குமரன். எல்லோருமே மெத்தை விரிப்பின் மேல் திண்டுகள் போட்டுச் சாய்ந்து கொண்டிருந்தார்கள். அமைதியும் இன்பமும் கலந்த சூழ்நிலைதான்.

யாழ் மீட்டிக் கொண்டிருந்த பாமினி அப்படியே தலையை வளைத்து அவனுக்கு அலட்சியமாகப் பதில் வணக்கம் செய்யவில்லை. ஒரு கணம் கரங்களை அதிவிருந்து எடுத்துக் கூப்பிய தாமரை மொட்டைப் போன்று தன் விரல்களைக் கூட்டி வைத்துக் கொண்டு இளநகை புரிந்தவாறே அவனை வணங்கினாள். பின்னர் தொடர்ந்து சிறிது நேரம் இசைத்துவிட்டு, யாழை எடுத்து ஒருபுறம் நகர்த்தி வைத்தாள்.

''அதற்குள் நிறுத்தி விட்டீர்களே!'' என்றார் குலோத்துங்கர்.

''கவிஞர் வந்திருக்கிறார். நெடுந் தொலைவிலிருந்து அவரை அழைத்து வந்திருக்கிறீர்கள். அவரைக் கேட்க வேண்டுமென்றல்லவோ நாம் இங்கு கூடியிருக்கிறோம்?'' என்றாள் பாமினி.

குலோத்துங்கர் உடனே விருந்தினர்களைப் பற்றிய புகழுரைகளில் இறங்கி விட்டார். கோசல சாம்ராஜ்யத்தில் அவர்கள் பல கன்னடப் புலவர்களை வைத்து ஆதரிப்பதையும் கம்பரை வரவேற்று உபசரித்ததையும் கூறினார். மேலும் இன்னிசை, ஆடல் பாடல் முதலிய கலைகளில் அவர்கள் கொண்டுள்ள ஈடுபாட்டை விவரித்தார்.

''இளவரசியின் அன்னையாரே ஆடல் பாடல்களில் வல்லவர். வீர நரசிம்மருடைய ரசிகத் தன்மைக்கு ஓர் எல்லையில்லை. முக்கியமான விழாக்களின் போது சபையினர், புலவர்கள், கலைஞர்கள் முன்னிலையில் அரசியாரே வந்து இன்னிசை கூட்டி மகிழ்விப்பார்கள். நரசிம்மருடைய ரசிகத் தன்மைதான் இளவரசியாரையும் கலையார்வம் கொள்ளச் செய்திருக்கிறது.

பண்டிகைகளை முன்னிட்டு
சலுகை விலையிலும்
தவணை முறையிலும்

## லிப்கோவின் மகத்தான வெளியீடு!

( சுமார் 5000 பக்கங்கள் )

கீர்த்தனாசார்ய ஸ்ரீ உ. வே. C. R. ஸ்ரீநிவாஸய்யங்கார் அவர்களின்

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

( தமிழ் வசனம் )

இதுவரை வெளிவந்த மூன்று பதிப்புக்களில் இல்லாத அநேக விசேஷாம்சங்களுடனும், ஸ்ரீமத் ராமாயணத்தையொட்டிய வேறு பல வெளியீடுகளுடனும், பாராயணத்திற்குரிய பல பொருள்களுடனும், ஸம்ஸ்க்ருத வால்மீகி ராமாயணத்துடனும் ஓர் அழகிய மரப்பெட்டியில் அளிக்கப்படுகிறது.

1. பால காண்டம் (350 பக்கங்கள்)
2. அயோத்யா காண்டம் (412 பக்கங்கள்)
3. ஆரண்ய காண்டம் (210 பக்கங்கள்)
4. கிஷ்கிந்தா காண்டம் (190 பக்கங்கள்)
5. ஸுந்தர காண்டம் (474 பக்கங்கள்)
6. யுத்த காண்டம் (504 பக்கங்கள்)
7. உத்தர காண்டம் (276 பக்கங்கள்)
8. ஸ்ரீமத் வால்மீகி ராமாயண தத்வார்த்த தீபிகை (ராமாயண கோட்டுகள்) (472 பக்கங்கள்)
9. இக்ஷ்வாகு குலதனம் என்னும் ஸ்ரீரங்க மாஹாத்மியம் (440 பக்கங்கள்)
10. ஸ்ரீராம ஸ்தோத்ரமாலா (352 பக்கங்கள்)
11. ஸ்ரீமத் ராமாயண பாராயண வகைகளும் முறைகளும், ஸ்ரீராம பூஜா மந்த்ரானுஷ்டான க்ரமமும் (96 பக்கங்கள்)
12. ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம் (24 பக்கங்கள்)
13. குமாரனும் கோசலை குமாரனும் என்னும் திருப்புகழில் ராமாயணம் (80 பக்கங்கள்)
14. Select Shrines of Sri Rama (Art Plates) (114 பக்கங்கள்)

மேற்கண்ட 14 புஸ்தகங்களை வாங்குபவர்க்கு மட்டும் இலவசமாக அளிக்கப்படுபவை (கையிருப்புள்ளவரை):

15. ஸம்ஸ்க்ருத ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் (764 பக்கங்கள்)
16. ஸ்ரீராமர் அழகிய வர்ணப் படம்
17. ஸரஸ்வதி பீடம் (சிக்குப் பலகை)
18. அக்ஷதை பரணி
19. திலகப் பை
20. மேற்கண்டவை களைத் தாங்கும் மரப்பெட்டி



மேற்படி வெளியீடுகள் அனைத்தும் சேர்ந்து விலை ரூ. 140
(தபால் கூலி, பாக்கிங், ரெயில்வே அல்லது லாரி கட்டணம் வேறு)

சலுகை விலை

பண்டிகைகளை முன்னிட்டு (8-10-1964 முதல் 31-1-1965 முடிய) மொத்தமாகச் செலுத்துபவர்க்குச் சலுகை விலை ரூ. 125
(தபால் கூலி, பாக்கிங், ரெயில்வே அல்லது லாரி கட்டணம் உள்பட)

★ ★ ★

தவணை முறை

(1) முதலில் ரூ. 40 (31-1-1965க்குள்). (2) அடுத்த 3 மாதங்களுக்குள் 3 தவணைகளுக்கு மேற்படாமல் ரூ. 60. (3) அதற்கடுத்த 2 மாதங்களுக்குள் 2 தவணைகளுக்கு மேற்படாமல் ரூ. 40 செலுத்தலாம். இத்தொகை ஒவ்வொன்றும் கிடைத்ததும், 3 பகுதிகளாக மேற்படி வெளியீடுகளும் அனுப்பி வைக்கப்படும்.

ஸ்தாபிதம் : 1929 | பதிப்பகத்தார் : | டெலிபோன் : 41538



## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி (K)

8, ரங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை-17

NALIN

கம்பரின் கவிதையில் கூடச் சில பாடல்கள் இவருக்கு மனப்பாடம்.''

பைந்தமிழ்க் குமரன் மெய்யாகவே இப்போது நாணமுற்றான். கன்னட நாட்டுப் பெண்மணி கம்பரையும் கற்றிருக்கிறாள் !

''நீங்கள் புனைந்த கவிதைகளைப் பாடலாமே?'' என்றார் குலோத்துங்கர்.

தயக்கத்தோடு பைந்தமிழ்க் குமரன் பதிலளித்தான். ''கவிச் சக்கரவர்த்தி கம்பரிடமே கவி கேட்கும் பாக்கியம் பெற்ற புவிச் சக்கரவர்த்திகளின் முன்னால் எனக்கு எதுவுமே பேச நா எழவில்லை. திருவள்ளுவரிலும் சங்கப் பாடல்களிலும் ஓரளவு எனக்குப் பழக்கமுண்டு. நான் தமிழ் கற்று வருபவன். சுயமாகக் கவி புனைந்து பாடும் அளவுக்கு எனக்கு ஆற்றல் இல்லை.''

'' இது அற்புதமான கற்பனை !'' என்று கூறிச் சிரித்தார் குலோத்துங்கர். ''வீர நரசிம்மரே! புலவர் இளைஞராக இருக்கிறாரே என்று எண்ண வேண்டாம். பாண்டிய நாட்டிலேயே இப்போது இவரைப் போல் சிறப்புமிக்க புலவர் வேறு யாரும் இல்லை. போகுமிடமெல்லாம் மக்கள் கூடுகிறார்கள். இவர் கேளாமலே இவரிடம் செல்வங்கள் வந்து குவிகின்றன. அரசர்கள் புலவர்களுக்குப் பரிசில் வழங்குவதுதான் உலக வழக்கம். இந்த இளைஞரோ பாண்டியருக்கே பரிசில்கள் வழங்கியிருக்கிறார் !''

இராஜ ராஜனுக்குச் சினம் பொங்கிக் கொண்டு வந்தது. குலோத்துங்கரின் சொற்களைக் கேட்டபோது பாமினியின் கண்ணிமைகள் வியப்பால் விரிந்ததை அவன் கண்ணுற்றான். கேவலம், ஒரு புலவனைப் புவியாளும் சக்கரவர்த்தி இப்படியா பாராட்டுவது ?

''வள்ளுவருக்கு நான் கூறும் உரையில் மக்களுக்கு ஏதோ புதுமை தென்பட்டிருக்கிறது. அதனால் கூடுகிறார்கள்'' என்றான் புலவன்.

''அதையும் தவிர ஏதோ கூத்துப் பாடல் ஒன்று புனைந்திருக்கிறீர்களாமே! அதன் புகழ் பாண்டிய நாட்டின் எல்லையைக் கடந்து கங்காபுரி வரையிலும் பரவி விட்டது. அதனாலேயே உங்களை அழைத்திருக்கிறேன்.''

நேருக்கு நேராக நெருக்கடியான கட்டம் வந்து விட்டது புலவனுக்கு. பெரிய மலையொன்று இடம் பெயர்ந்து அவனை நோக்கி உருண்டு வருவதாகத் தோன்றியது. தப்பித்துக் கொள்ள வழியே தென்படவில்லை.







''அந்தக் கூத்துப் பாட்டு என் உணர்ச்சிக் கொந்தளிப்பில் பிறந்த ஒன்று. கவி நயமோ, சொல்லழகோ, மற்ற உயர்ந்த கவிதைகளுக்குரிய தன்மையோ அதில் இருக்காதென்று அஞ்சுகிறேன். போர் வீரன் ஒருவன் தன் வாழ்வில் நிகழ்ந்த பெருந் துன்பத்தை என்னிடம் கூறினான். அந்தத் துன்பத்தின் உறுத்தல் தாங்காது பாடினேன். மேலும் கூத்தாக நடிப்பதற்கென்றே பாடியது அது.''

''தனியாகவும் அதைப் பாடலாமல்லவா?'' என்று கேட்டாள் பாமினி.

''இந்த அமைதி நிறைந்த இனிமையான சூழலுக்கு அந்தத் துன்பியல் பாடல் அவ்வளவு ஏற்றதாக இராதோ எனத் தயங்குகிறேன்.''

''வாழ்க்கையின் துன்பம் கவிதையாக மாறும்போது அது கற்போருக்கு இன்பந்தானே?'' என்று கேட்டாள் பாமினி. ''இராம காதையிலும் துன்பியல் கட்டங்கள் நிறைந்திருக்கின்றனவே! இராவணன் சீதையைத் தூக்கிச் செல்லும் போது சீதை கூறும் மொழிகளைக் கேட்டால் கல்லும் கரைந்து உருகி விடுமே!''

புலவன் மேலும் தயங்கினான். ஒருவேளை கேட்போரின் மனமே அதனால் புண்படக் கூடுமென்றும், அந்த இடத்தில் பாடக் கூடிய பாடலாக அதைத் தான் கருதவில்லையென்றும் மறுகினான். அவன் மறுக்க மறுக்க மற்றவர்களின் பிடிவாதம் அதிகரித்தது. வீர நரசிம்மரே குறுக்கிட்டு, ''உங்கள் பாடலுக்கு யாரையும் புண்படுத்தும் ஆற்றல் [illegible] ஒரு வெற்றி!'' என்று கூறிப் பாடத் தூண்டினார்.

பைந்தமிழ்க் குமரனுக்கு மனப்பாடமாகி விட்ட கூத்து அது. அங்கயற் கண்ணி அம்மையை நினைத்துக் கொண்டு கணீரென்ற குரலில் தொடங்கினான். வெண்கலத்தின் கிண்கிணி நாதம் போன்ற அவனுடைய குரல் ஒலி சொல்லுக்கும் பொருளுக்கும் உணர்ச்சிக்கும் ஏற்பப் பல வகை இந்திர ஜாலங்களைப் புரியத் தொடங்கி விட்டது.

முதலில் பாண்டியநாட்டின் குறிஞ்சி நிலத்து இளவேனிற் காட்சி அழகு கேட்போரின் கண் முன்னே விரிந்தது. மலை முகட்டில் மேகங்கள் தவழ்ந்து ஊசி முனைகளைப்போல் குளிர்ச் சாரலை உதிர்க்கும் மாலைப் பொழுதில் தலைவன் தலைவியைச் சந்திக்கிறான். தொலைதூரத்தில் வரும் தலைவியின் அழகு, அவன் நெருங்கியவுடன் அவளது விழிகளின் தோற்றம், ஒருவரிடம் ஒருவரது உள்ளம் நழுவி விழும் இன்பம்—இவ்வளவையும் அவன் பாடிக் கொண்டு வந்தான். கயல்விழியாகிய கூத்துடைத் தலைவி அவன் பாடப் பாட அவன் இதய அரங்கிலே சொல்லுக்குச் சொல் அபிநயம் பிடித்து வந்தாள். பைந்தமிழ்க் குமரன் தன்னையே மறந்து விட்டான். கண்கள் எங்கோ நிலைத்திருக்கத் தலைவியாம் கயல்விழியின் உணர்ச்சி பாவங்களை ரசித்தவண்ணம் பாடுவது போல் அவன் அநுபவித்துப் பாடினான்.

''ஆஹா! ஆஹா!'' என்று உற்சாகமாய்க் கூவினார் குலோத்துங்கர். வீர நரசிம்மனுக்கோ குலோத்துங்கர் இந்த வயதிலும் சிருங்கார ரசக் கவிதை கலை இவ்வளவு குதூகலத்தோடு அநுபவிக்கிறாரே என்ற வியப்பு! இராஜராஜன் பாடலால் உந்தப் பெற்று அடிக்கடி பாமினியை ஏக்கத்தோடு நோக்கினான். பாமினியின் விழிகள் கிறங்கியிருந்தன. கவிதை மதுவுண்ட தேன் வண்டு தன்னை மறந்து ரீங்காரம் செய்வது போல், மகர யாழை எடுத்து வைத்துக் கொண்டு, கவிஞனின் குரலுக்கும் சந்தத்துக்கும் ஏற்ப மீட்டத் தொடங்கி விட்டாள்.

பாட்டுடைத் தலைவனுக்கும் திருமண நாள் நிச்சயமாகி விடுகிறது. அவர்கள் தங்களது இன்பம் நிறைந்த எதிர்காலத்தைக் கனவு காணுகிறார்கள். திடீரென்று போர் முரசம் அதிர்கிறது. காலமெல்லாம் அவனுக்காகக் [illegible]ப்பதாகவும், காலன் அவனைக் கொண்டு சென்றாலும் கன்னி விரதம் பூண்டு அவனை நெஞ்சில் வளர்ப்பதாகவும் கூறுகிறாள் தலைவி. போர் வெறியர்களான இரு பெரும் அரசர்களுமே இது கேட்டு உருகி விட்டனர்.

கடைசியில் பயங்கரமான அந்தத் துன்பியல் கட்டம் வந்தது. பகை நாட்டு வெறியனிடமிருந்து தனது நெறியைக் காத்துக் கொள்ளத் தலைவி படாத பாடு படுகிறாள். கண்ணனை, ராமனை, கன்னிகையை, தன் தலைவனைக் கூவி அழைத்துப் புலம்புகிறாள். — பலன்?

குலோத்துங்கரின் இரத்தம் கொதித்தது. சோழ நாட்டு வெறியன் ஒருவனுடைய செய்கையென்பதால் அந்தக் கொதிப்பா? அல்லது அதையே ஒருவன் தமக்கு எதிரிலேயே பாடத் துணிந்து விட்டானே என்ற கொதிப்பா?

# TRIPLE TRIUMPH FOR TIARA










Tiara offers you a choice of three shampoos
to suit every kind of hair. Shampoos which condition your hair while washing it squeaky clean.

**Tiara Shampoo plus Egg.** Dull, straggly hair springs back to life with Tiara Shampoo plus Egg. It ends snarls and tangles... tames stubborn locks. Tiara Shampoo plus Egg washes your hair shimmering clean.

**Tiara Creme Shampoo** chases dandruff from your hair. Its rich lather penetrates into your scalp, washes away grease and every particle of dust. This highly concentrated shampoo is very economical in use. It is a complete beauty treatment for your hair.

**Tiara Lanolin Lotion Shampoo** softens dry, brittle hair. The lanolin in the shampoo conditions your hair... makes it obedient. Watch the stars come back in your hair with Tiara Lanolin Lotion Shampoo.

Sole Distributors in India: SPENCER & CO. LTD. 153 Mount Rd., Madras 2 ☐ Spencers Building, Forjett Street, Bombay 26 ☐ 70 Diamond Harbour Rd., Kidderpore, Calcutta 23 ☐ 19A Alipore Rd., Delhi 6





இங்கிலாந்திலுள்ள 'கார்டிஃப்' எனுமிடத்தில் தாம்ஸன் ஸ்தாபனத்தார் அளிக்கும் மூன்று மாதப் பத்திரிகைத் தொழில் பயிற்சியைப் பெறுவதற்காகக் 'கல்கி' இணை ஆசிரியர் ஸ்ரீ இ. ராஜேந்திரன் அவர்கள் செப்டம்பர் மாதம் 22ந் தேதி சென்னையிலிருந்து இங்கிலாந்துக்குப் புறப்பட்டார். கல்கிப் பத்திரிகைத் தொழிலாளர்கள் ஸ்ரீ ராஜேந்திரனை அன்புடன் வழியனுப்பி வைத்த காட்சி.

---

வீரநரசிம்மனுக்கும் அவருடைய புதல்விக்கும் முன்னால் இப்படியோர் எரிமலை வெடிக்கும் என்றே அவர் எதிர் பார்க்கவில்லை போலும்!

பாமினியின் கண் முத்துக்கள் தெறித்தன. அவளது உடல், உள்ளம், உயிர் மூன்றிலும் தீப்பற்றிக் கொண்டு விட்டது. தான் மூர்ச்சித்து விழுந்தால் கவிஞனுக்கு ஏதும் நேர்ந்து விடுமே என்பதற்காக அவள் தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள முயன்றாள்.

அவளுடைய நிலையைக் கண்டவுடன் திடீரென்று பாட்டை நிறுத்தினான் கவிஞன். தலைவி, தலைவனின் முறையீட்டைக் கேளாது நெருப்பில் தாவி வீழ்ந்ததுடன் நிறுத்திக் கொண்டான். போர்வீரன் செய்யும் வீர சபதத்தைப் பாடினால், பாடி முடிப்பதற்குள் தனது தலை கழுத்தில் தங்காது என்பது அவனுக்குத் தெரியும்.

வசந்தமண்டபமே நெருப்பு மண்டபமாக மாறியது. ஒவ்வொரு தூண்டா மணி விளக்குமே ஒவ்வொரு தீப்பந்தமாக மாறிப் பொங்கியது. ஆவேசம் வந்து இறங்கியவன் போல் புலவன் செயலிழந்து போனான்.

"இது கூத்தாக வேறு நடக்கிறதோ?" என்று தம்மை அடக்கிக் கொண்டு கேட்டார் சக்கரவர்த்தி. "யாருடைய கூத்துக் குழு அது?"

"கயல்விழி என்ற பாணர் குல மங்கை!" என்றான் புலவன்.

சரேலென்று வாளை உருவிக்கொண்டு அவன் முன்னே பாய்ந்து வந்தான் இராஜராஜன். "கயல்விழி கதை சொல்லித்தான் நீ இதைப் பாடினாயா?"

"இல்லை; ஒரு வீரன் கூறினான்; நான் பாடினேன்; அவள் நடிக்கிறாள்."

தந்தையும் விருந்ினர்களும் அருகிலிருக்கிறார்களே என்பதையும் மறந்து அவன் வாளை வெறியோடு ஓங்கினான். ருலோத்துங்கர் அவமானத்தால் வெலவெலத்துப் போனார். பாமினி ஓடி வந்து இராஜராஜனின் கரத்தைத் இறுகப் பற்றினாள். வாள் கீழே நழுவி விழும் வரையில் அவள் தன் பிடியைத் தளர விடவில்லை.

"சோழ சாம்ராஜ்யத்தின் கவிதா ரசனை மிக அற்புதமாக இருக்கிறதே! இப்படியும் புலவருக்கு இங்கு பரிசளிக்கும் வழக்கம் உண்டு போலும்!"

அவனுடைய சொற்களாகிய கூர் வாள் இப்போது சக்கரவர்த்தியின் இதயத்தில் பாய்ந்தது. புலவனோ அணுவளவும் அதிர்ச்சியுறாது புன்னகை செய்தான். வாள் முனை தனது நெஞ்சுக்கே வந்த போதும் அஞ்சாமல் நகைத்த அந்தப் புலவனின் போக்கு அவனைத் திகைப்புறச் செய்தது. (தொடரும்)



ராஜயோகம்
4
ஆசையாக... ஆசையாக... ஆசையாக...
என்ன? என்ன? என்ன?




வந்து... வந்து... வந்து...
ஏதும் சொல்வதற்குப் பர்மிட், லைசென்ஸ் ஏதாவது வேண்டுமா?
கதை: தம்பு * சித்திரம்: செல்லம்




ஆமாம்! லைசென்ஸ் வேண்டும்!
நீங்கள் எது வேண்டுமானாலும் பேசலாம். நான் ஆண் பிள்ளைப் பசங்கள் கல்லூரியில் அவர்களோடு சேர்ந்து படித்தவளாக்கும்! எதைக் கேட்டும் அதிர்ச்சியடைய மாட்டேன்.




நான் மிகவும் கூச்சப் பட்டவன்; சங்கோசி. ஒருவன் தன் சகோதரியைத் தவிர வேறு யாரையும் கண்ணெடுத்தும் பார்க்கக் கூடாதென்று காலட்சேபங்களில் கேட்டுக் கேட்டு...
ஓஹோ!




என்ன ஓஹோ?
அதுதான், என் கைப்பையைப் பறித்துக்கொண்டு ஓடினீர்களாக்கும்?




கையில் பை இருக்கிறதென்று நீங்கள் சொல்லித்தான் எனக்குத் தெரியும்!


இவர்கள் பேசுவதைச் சிலர் வேடிக்கை பார்த்திருந் தனர்.
அவர்கள் எல்லோரும் நின்று வேடிக்கை பார்க்கிறார்களே என்ன நினைத்துக் கொள்வார்கள்?
என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். மடியில் கனமிருந்தால் தானே வழியில் பயம்? அட்டடா, நான் மடி வைத்துக் கட்டிக்கொள் வதில்லை...


அப்படியானால் நான் நடந்ததைச் சொல்லியிருக்கிறேன்.
நின்று கொண்டு தானே இருக்கிறோம். கால் வலிக்கிறது. உட்கார்ந்து கொள்கிறேன்.


வேடிக்கைப் பேச்சுக்கு இது தருணமல்ல. தங்கள் பை என்றீர்கள். வீட்டுச்சாவி அதிலிருக்கிறது என்றீர்களே. ஏன்?
நான் அப்படிச் சொல்லா விட்டால் தங்களுக்குச் சமத்தியாகப் போட்டி ருப்பார்கள்.


அவர்கள் என்ன நினைத்துக் கொள்வார் கள், தெரியுமா? தெரியுமா?
தெரியும். தெரியும். நீங்களும் நானும் கணவனும் மனைவி யும் என்று நினைத்துக் கொள்வார்கள். அவ்வளவு தானே?


என்னது அவ்வளவு தானேவா? தானேவா?
நான் எத்தனையோ அமெச்சூர் நாடகங்களில் கதாநாயகியாக நடித்திருக்கிறேன். 'நாதா' 'ப்ரியே' என்றெல்லாம் அழைக் கிறது சர்வ சாதாரணம். மனத்தில் படாமல் சொல்ல வேண்டியது.

# அவரது தோற்றப் பொலிவின் கம்பீரமும் மிடுக்கும் அலாதி...



அவர் அணியும் ஆடைகள் நாகரீகத்தின் சின்னம். வெற்றிப் பெருமிதம் துலங்கும் அவரது தோற்றத்துக்கு அடிப்படை சக்தி "டெரீன்" சூட்டிங்தான். இறக்குமதி செய்யப்பட்ட பாலியஸ்டர் நூலால் தயாரிக்கப்பட்ட சக்தி "டெரீன்" சூட்டிங்குகளும், ஷர்ட்டிங்குகளும் துவைத்து மடிப்புக் கலையாமல் அணியக்கூடியவை. நிறம் மங்காமல் நீடித்து உழைக்கும் இவை சொகுசானவை என்பதோடு எங்கும் அணிந்து செல்ல ஏற்றவை.

போதார் தயாரிப்புகள்

**Shakti Silks**

டெரீன் சூட்டிங்குகள் மற்றும் ஷர்ட்டிங்குகள் . ரேயான் சூட்டிங்குகள் . க்ரேப்
டஃபேட்டா . சாட்டின் . ப்ரோகேட் . நைலான் . ரேயான்

# 11. அழிவுக்கு அஸ்திவாரம்

அலி ஆதில்ஷாவுக்கு உதவுவதாக வாக்களித்து வழியனுப்பியதும் ராமராயர் படையெடுப்பிற்கான காரியங்களைத் துரிதப்படுத்துவதில் மூழ்ந்தார். தோல்வி என்ற பேச்சுக்கே இடமில்லாத வகையில் ராமராயரின் செல்வாக்கும் படைகளும் பலம் பெற்றிருந்தன. ஆனாலும் தன்னிச்சைப்படி எதையும் செய்ய விரும்பாத அவர் அகமது நகர், கோல்கொண்டா ஆகியவற்றின் மீது படையெடுக்க அரசவைத் தலைவர்களின் அனுமதியைப் பெற விரும்பினார். சம்பிரதாயத்தைப் புறக்கணிக்க விரும்பாத செயல்தான் இது.

வேங்கட விலாச மண்டபத்திலே மகா மண்டலேசுவரருடைய அவசர அழைப்பின் பேரில் அவைத் தலைவர்களும் பெருங்குடி மக்களும் வந்து கூடி இருந்தார்கள். அமைச்சர் திருமலையும் தளபதி வேங்கடாத்திரியும் அண்ணாவின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். ஆலோசனை மண்டபத்துக்கு வந்த அரவீட்டுத் தலைவர், அகமதுநகர், கோல்கொண்டா ஆகிய நாடுகளின் மீது போர் தொடுக்க வேண்டிய காரணங்களை அரசியல் சாகஸத்துடன் அழகாக விளக்கி அவர்களின் ஒப்புதலைப் பெற்ற பின் சபை கலைந்தது. வேங்கடாத்திரி, திருமலை, ராமராயர் மூவர் மட்டுமே இப்போது அந்த வேங்கட விலாச மண்டபத்திலே வீற்றிருந்தார்கள்.

கண்டகார நாயகர்களுக்கு உரிய தாக்கீதுகள் அனுப்பப்பட்டன. யுத்தத்துக்குச் செல்லும் நால்வகைப் படைகளின் தேவைகளை அறிந்து, எவ்விதக் குறையுமில்லாமல் கவனிப்பவர்கள்தான் கண்டகார நாயகர்கள். போருக்குக் கிளம்புவதற்கான நல்ல நாளைக் குறித்து அனுப்பும்படி சாகுனிகர்களுக்கு செய்தி அனுப்பினார்கள். இனி யார் யார் எங்கு எப்படிச் சென்று போரை நடத்த வேண்டும் என்பதை விஜய நகரத்தின் உயிர்நாடிகளாக விளங்கும் அரவீட்டுச் சோதரர் மூவரும் திட்டமிடலாயினர்:

"வேங்கடாத்திரி! நீ, ஜகதேவராவ், அயின் உல் மூல்க் ஆகியவர்களுடன் கோல்கொண்டாவின் தென் பகுதியைத் தாக்கி முன்னேறு. உனக்கு உதவியாக ஆதில்ஷாவின்



படைகளில் ஒரு பகுதியையும் அனுப்பி வைக்கிறேன்.''

''அப்படியே ஆகட்டும், அண்ணா!'' என்றான் வேங்கடாத்திரி. ''குதப்ஷாவின் கர்வத்தைக் குலைக்க நம்முடைய படைகள் மட்டுமே கூடப் போதுமே!''

''தோற்றவன் இத்தனை விரைவில் மறுபடி போருக்கு வருவதென்றால்.... நாம் அவன் பலத்தைக் குறைவாக மதிப்பிடக் கூடாது, வேங்கடாத்திரி. அலி ஆதில்ஷாவின் படைகள், பீடார் ராஜ்யத்தின் கல்தான் அலி பரீத்ஷாவின் படைகளுடன் நான் கலியாண் கோட்டையை விடுவிக்கப் போகிறேன். நிஜாம் ஷா, குதப் ஷா இவர்கள் இரண்டு பேரின் பெரும் படையும் இங்குதான் கொண்டு வந்து குவிக்கப்பட்டிருக்கிறது. இவர்களை முறியடித்துக் கலியாண் கோட்டையைக் கைப்பற்றியபின் அகமது நகருக்குள் புகுந்து அதன் தலைநகர் வரை செல்வது என் திட்டம். இதற்குள் நீ கோல்கொண்டாவைத் தக்கபடி கவனித்துக் கொள்ள வேண்டும். உன் செயலை முழுமையாக்க அகமது நகர் வழியாக நானும் கோல் கொண்டாவிற்குள் புகுந்து உதவுகிறேன்'' என்று தம் போர்த் திட்டத்தை விளக்கினார் ராமராயர்.

இத்தனை நேரம் எதிலும் கலந்து கொள்ளாமல் ஆனால் எல்லாவற்றையும் கவனித்து வந்த திருமலை தாங்க முடியாத ஆத்திரத்துடன், ''வாளெடுத்துப் போர் புரியவே தெரியாதவன், போர்க்களத்தையே அறியாதவன் என்று என்னைப் பற்றி எண்ணமா அண்ணா உங்களுக்கு?'' என்று கேட்டான். உள்ளத்தில் குமுறும் கோபம் அவன் உதடுகளின் படபடப்பிலிருந்து தெரிந்தது.

ஆத்திரத்தினால் படபடக்கும் தம்பி திருமலையை அமைதியுடன் நோக்கினார் ராமராயர். அவர் பார்வையையும், அவர் சொல்லப் போகும் பதிலையும் கேட்க விரும்பாத திருமலையே தொடர்ந்தான். ''எந்தப் போராகிலும் என்னை விலக்கியே திட்டமிடுகிறீர்களே, அது ஏன்? வேங்கடாத்திரி இல்லாத போர் உண்டா? அவனை விடப் போர்க் கலையிலே எந்த வகையில் நான் குறைந்தவன்? நேற்று வந்த கத்துக் குட்டிகளுக்கெல்லாம் பட்டம் பதவிகளை கொடுத்துப் பாராட்டு விழா நடத்துகிறீர்கள். எத்தனையோ போர்களில் உங்களோடு தோளோடு தோள் கொடுத்துப் போரிட்ட என்னை இப்போதெல்லாம் எங்குமே அனுப்பாத காரணந்தான் என்ன?'' எரியும் தீயாக ஜ்வலித்தான் திருமலை.




''இல்லாதவர்களுக்குத்தான் எதையும் கொடுப்பார்கள். நிறைந்த பாத்திரத்திலிருந்து எடுத்துத்தான் குறைவான பாத்திரத்திற்கு இட்டு நிரப்புவார்கள். உன் வீரத்திலோ திறமையிலோ நான் என்றுமே குறைபாடு கண்டதில்லை திருமலை. தலைநகரிலே தகுதி வாய்ந்த நீ இருக்கிறாய் என்ற தைரியத்தினால்தான் விஜயநகரம் தான் திட்டமிட்டு நடத்தும் போர்களிலே வெற்றி வாகை சூடி வருகிறது. எல்லோரும் போர்க் களத்துக்குச் சென்று விட்டால் பிறகு நாட்டை நிர்வகிப்பதோ, போர்க்களத்திலே உள்ள வீரர்களின் தேவைகளைக் கவனிப்பதோ யார்?'' என்றார் ராமராயர்.

திருமலையின் ஆத்திரம் அர்த்தமற்றதல்ல. முன்பு ஒரு தடவை ராமராயர் தலைநகரில் இல்லாத போது திருமலை வேங்கடாத்திரியுடன் சேர்ந்து கொண்டு புரட்சி நடத்தி ஆட்சிப் பொறுப்பைக் கைப்பற்றிக் கொண்டதை அவரால் மறக்க முடியுமா? அதன் பிறகு ராமராயர் தலைநகரிலே வேங்கடாத்திரியையும் திருமலையையும் தனித்திருக்கவிடுவதே இல்லை. அது மட்டுமல்ல, எந்தப் போரையும் திருமலையிடம் ஒப்படைப்பதுமில்லை. அந்தப் புரட்சியின் வித்து திருமலைதான் என்று அவருக்குத் தெரிந்து விட்டதே அதற்குக் காரணம். அதனால்தான் அவரை அதன் பிறகு தனிமைப்படுத்தியே செயல் புரிந்து வந்தார் ராமராயர். ஆனால் அதை வெளிக் காட்டிக் கொள்ளாமல் சமத்காரமாகப் பதில் சொன்னார் அவர்.

"உங்கள் சமாதானங்கள் எதுவும் நியாயமாகப் படவில்லை எனக்கு. வேண்டுமென்றே என்னை நீங்கள் ஒதுக்கி உதாசீனப் படுத்துகிறீர்கள் என்பதைப் புரிந்து கொள்ள முடியாதவனல்ல நான்" என்று கூறிய படியே விருட்டென்று அங்கிருந்து வெளியேறினான் திருமலை.

முதுமையின் முறுக்கேறிய ராமராயரின் முகத்தில் இளநகை தோன்றியது. வேகமாக வெளியேறிப் போகும் திருமலையையே வெறித்துப் பார்த்தபடி சிரித்துக் கொண்டிருந்தார் உள்ளூற. சினந்து சென்ற சின்னண்ணா திருமலையையும், சிரிக்கும் பெத்தண்ணா ராமராயரையும் பார்த்தபடி சிந்தனையில் ஆழ்ந்து போனான் வேங்கடாத்திரி.

தலைநகரை நோக்கித் தளவாய்களும் அமர நாயகர்களும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய படைகள் விஜய நகரத்தில் வந்து குவிந்த வண்ணமிருந்தன. சாகுனிகர்கள் வகுத்துக் கொடுத்ததொரு நல்ல நாளில், மங்கல வேளையில் ராமராயர் பட்டத்து யானை மீது ஏறி அமர்ந்தார். இரண்டு தலைமுறைகளைக் கண்ட கிழட்டு யானை அது. ஆனாலும் கம்பீரம் குன்றவில்லை. விஜயநகரத்து யானைப் படையிலே மிகப் பெரியது, உயர்ந்தது, அந்த யானைதான். அதற்கு உயர்ந்த அணிமணிகளைக் கொண்டு அலங்கரித்திருந்தார்கள் பொருத்தமாக. அதன் இரண்டு காதோரங்களிலும் நல் முத்துக்களைக் கோத்தாக்கிய குஞ்சலங்கள் இரண்டு தொங்கிக் கொண்டிருந்தன. கரிய உடல் ஆடி அசையும் போது அந்த வெண் முத்துக் குஞ்சங்கள் கலகலத்து ஒளிவீசிப் பளபளப்பது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். அந்த யானையின் உயர்ந்த நெற்றியிலிருந்து துவளும் துதிக்கைவரை அணிவித்திருந்த முக படாத்தில் நவரத்தினங்களையும் வைத்து இழைத்திருந்தார்கள். தன்மீது விழும் சூரிய கிரணத்தை வண்ண ஒளிகளாக்கி வாரி இறைத்தது அது. மத்தகஜத்தினுடைய உடலின் கருமையை மறைப்பதற்குத்தானோ என்னவோ அதன் முதுகில் வண்ணப் பட்டுக்களைக் கொண்டு உருவாக்கிய அங்கியை இருபுறமும் தரையில் புரளும்படி போர்த்தியிருந்தார்கள். தங்கத்தாலாகிய அம்பாரியிலே போர் அனுபவத்தாலும், உருவத்தாலும் முதுமையடைந்து ஆனால் உள்ளத்தாலும் செயல்களாலும் வாலிபராக விளங்கிய ராமராயர் தமது மீசையைச் சொகுசாக ஒதுக்கி விட்டவாறு உட்கார்ந்திருந்தார்.

நீண்டு வளைந்த, தங்கப் பூண் கட்டிய தந்தங்களில் தொங்கும் குஞ்சங்கள் அசையக் கம்பீர நடை போட்டுச் சென்று கொண்டிருந்தது விஜயநகர சாம்ராஜ்யத்தின் பட்டத்து யானை. அதன் இரு பக்கத்திலும் வேலும் வாளும் தாங்கிய வீரர்கள் குதிரைகளில் அணிவகுத்து வந்து கொண்டிருந்தார்கள். அந்தக் குதிரைப் படையணிக்குத் தலைவனாக, நடுநாயகமாக ஒரு வெண் புரவியில் வந்து கொண்டிருந்தான் வேங்கடாத்திரி.

இதன் பின்னால் மற்றுமுள்ள யானைப் படைகளும் ஏராளமான குதிரைப் படைகளும் கணக்கிலடங்காத காலாட் படைகளும் வெள்ளமெனப் பெருகியோடித் தொடர்ந்து கொண்டிருந்தன. இவைகள் கிளப்பிய புழுதிப் படலம் பகலவனின் ஒளியை மறைத்துக் கொண்டது.

விஜயநகருக்கு வெளியே கூடாரமிட்டுத் தங்குவதற்காகவே இத்தனை கோலாகலமுடன் அவர்கள் போய்க் கொண்டிருந்தார்கள். பகையரசனின் மீது படையெடுத்துக் கிளம்புமுன் ஒரு சில நாள், நகருக்கு வெளியே முகாமிடுவது வழக்கம். இதை 'வெளிதூதாரா' என்பார்கள். சாம்ராஜ்யத்தின் பல்வேறு பகுதிகளிலுமுள்ள தளவாய்களும் அமரநாயகர்களும் வந்து கலந்து கொள்வதற்கு அவகாசமளிக்கவே இந்தக் கால இடைவெளி.

குறிப்பிட்ட பெருவெளியை அடைந்ததும் ராமராயர் யானை மீதிருந்து கீழிறங்கினார். நன்கு அலங்கரிக்கப்பட்ட அவரது குதிரை தயாராக நின்று கொண்டிருந்தது. அதன் அருகே வில்லும் அம்பும் தாங்கிய வீரன் ஒருவனும் நின்று கொண்டிருந்தான். தம் அசுவத்தின் மீது தாவி ஏறிய ராமராயரிடம் அந்த வீரன் தான் தாங்கி நின்ற வில்லையும் அம்பையும் பணிவுடன் நீட்டினான். அதைப் பெற்றுக் கொண்ட அவர், தாம் படையெடுத்துச் செல்லும் நாடு உள்ள திசையை நோக்கி வில்லிலே நாணேற்றி ஓர் அம்பை எய்தார். கொம்பு வாத்தியங்கள் முழங்கின. சங்கம் ஒலித்தது. முரசு அதிர்ந்தது. நால் வகைப் படைகளும் நாலா திசைகளிலும் வகை வகையாகப் பிரிந்து ஒதுங்கின. நடுவிலே வீரர்கள் வெகு வேகமாக ராயர் தங்குவதற்கான கூடாரத்தை நிர்மாணிக்கலானார்கள். இதைத் தவிரப் படை வீரர்களுக்காகப் பல்லாயிரக்கணக்கான கூடாரங்களும் வரிசை வரிசையாக நிர்மாணமாகிக் கொண்டிருந்தன. விஜயநகரமே வேறு இடத்துக்கு இடம் பெயர்ந்து வந்து விட்டது போன்றதொரு வியத்தகு காட்சியாக அந்த மைதானத்திலே மன்னர் பாடி இறங்கிய 'வெளிதூதாரா' உருவாகிக் கொண்டிருந்தது. இத்தகைய சம்பிரதாயச் சடங்குகள் முறைப்படி நடந்தேறியதும் திட்டமிட்டபடி படையெடுத்துக் கிளம்பினார் ராமராயர்.

# நீங்கள் வாங்குகிறீர்கள்....
# ஆயுட்காலம் முழுவதும்
# கவலையற்ற தையல்
# ஆயுட்கால
# **ஸிங்கர்*** சேவை
# ஒவ்வொரு
# **மெர்ரிட்***
# தையல் மெஷினுடனும்

மெர்ரிட் தரும் உணர்விலே நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்—கஷ்டமில்லாத வேகக் கட்டுப்பாடு...வழவழப்பான, நிசப்தமான இயக்கம்... நுட்பமான டென்ஷன் கட்டுப்பாடு. ஏனெனில் மெர்ரிட் மிகவும் உறுதியானது இருப்பினும் சீராக 'பாலன்ஸ்' செய்யப்பட்டது.

இத்துடன் மெர்ரிட்டின் மற்றொரு மேன்மை—இதனுடன் நீங்கள் எந்த ஸிங்கர் கடையிலிருந்தும் வியாபாரியிடமிருந்தும் பிரபலமான ஸிங்கர் சேவையை நம்பியிருக்கலாம்.













* ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட்மார்க்

55. G. 9 TAM

கலியாண் கோட்டையைக் கைப்பற்றி விட்ட குதூகலத்திலே மூழ்கிக் கிடந்தார்கள் குதப்ஷாவும் நிஜாம்ஷாவும். வெற்றியை விழாவாகக் கொண்டாடி விருந்தும், கேளிக்கையுமாகத் தங்களை மறந்த ஆனந்தத்திலே மகிழ்ந்திருந்த போதுதான் தூதுவன் அந்தச் செய்தியைக் கொண்டு வந்தான். ஒரு வகையில் அது எதிர்பார்த்த செய்திதான் என்றாலும் அவன் கொடுத்த தகவல்களோ அச்சமூட்டுவதாக இருந்தன. அலி ஆதில்ஷாவுக்கு உதவியாக அலியா ராமராயர் வருவார் என்பது அவ்விரு சுல்தான்களும் எதிர்பார்த்ததுதான். ஆனால் ராமராயர் தங்களை வெற்றி கொள்ள மட்டும் வரவில்லை; இனி எப்போதுமே தலைதூக்காதபடி அழித்து ஒடுக்கும் ஆக்ரோஷத்துடன் வருகிறார் என்பதை வேவுகாரர்கள் விளக்கிய போது அவர்கள் உள்ளத்திலே நடுக்கம் தலை காட்டலாயிற்று. பாசறையிலே பரபரப்பு மிகுந்தது. பீஜப்பூரின் பெரும் படையும் விஜயநகரின் படை வெள்ளமும் வெகு வேகமாக முன்னேறி வந்து கொண்டிருக்கும் செய்தியோடு ஓடி வந்தான் மற்றொரு தூதுவன். கோல்கொண்டாவை நோக்கி வேங்கடாத்திரி முன்னேறிக் கொண்டிருக்கும் செய்தி குதப்ஷாவைக் குழப்பத்திலாழ்த்தியது. வேங்கடாத்திரியின் வீரத்தை அறிந்தவர் இப்ராஹிம். அவனோடு அவனுக்கு உதவியாக வரும் ஜகதேவ ராவோ கோல்கொண்டாவின் அவையிலே இருந்து பணியாற்றி அந்த நாட்டின் அந்தரங்கங்கள் அனைத்தையும் அறிந்தவர். இன்றைக்கு விஜயநகரின் வீரத் தளபதிகளில் ஒருவராக விளங்குகிறார். வேங்கடாத்திரி என்ற நெருப்போடு ஜகதேவராவ் என்ற காற்றும் கலந்து வரும் செய்தி அறிந்த குதப்ஷா தம் நாட்டுக்கு நேர்ந்துள்ள அபாயத்தை அறிந்தார். இனி அரைக்கணமும் தாமதிக்கக் கூடாதென்று உடனே தமது படைகளோடு சொந்த நாட்டைக் காக்க விரைந்தார்.

அன்று தம் உதாசீனத்தைத் தாங்கிக் கொண்டு நிதானமாக நடந்து கொண்ட ராமராயரின் கோபம் இன்று எப்படி வெளிப்படும் என்பதைக் கற்பனை செய்து பார்த்தார் நிஜாம்ஷா. கலியாண் கோட்டைக்கு ஆசைப்பட்டுச் சொந்த நாட்டையே பறிகொடுக்கும் ஒரு நிலை வந்து விடுமோ என்ற நடுக்கமும் ஏற்பட்டது. கைப்பற்றிய கோட்டையைக் கைவிட்டுத் தாயகத்தைக் காக்கத் தம் படைகளுடன் விரைந்தார்.

இப்படி இரண்டு பேரும் ராமராயரின் வரவைக் கேட்டுத் தங்கள் தங்கள் ராஜ்யத்தைக் காக்க விரைந்த போது ஆதில்ஷாவிற்கும் ராமராயருக்கும் கலியாண் கோட்டையை முற்றுகையிட்டுக் கைப்பற்ற வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. ஆனால் வந்த காரியம் கைகூடியது என்று வெறுமனே திரும்பிவிடவும் விரும்பவில்லை ராமராயர். அகமது நகரை நோக்கி ஓடும் ஹுஸைன் நிஜாம் ஷாவைத் துரத்திக் கொண்டு தாம் செல்வதாகவும், கோல்கொண்டாவைக் காப்பாற்ற ஓடும் குதப்ஷாவைப் பின்பற்றி ஆதில்ஷா செல்ல வேண்டும் என்றும் திட்டமிட்டுச் செயலில் இறங்கினார் ராயர்.

காட்டுத் தீயைப் போல, காட்டாற்று வெள்ளத்தைப் போல, எல்லாவற்றையும் கபளீகரம் செய்து கொண்டு முன்னேறிக் கொண்டிருந்தார் ராமராயர். விஜயநகரப் படைப் புயலின் முன்னே அகமது நகரின் எதிர்ப்புக்கள் துரும்பெனப் பறந்தன. அடுத்தவன் சொத்துக்கு ஆசைப்பட்ட அகமதுநகர் நிஜாம்ஷா தன் சொந்த நாட்டையே பறிகொடுத்துப் பக்கத்து நாட்டில் போய்ப் பதுங்கும்படியான நிலைமை ஏற்பட்டது. அகமது நகரின் ஆணவம் அழிந்தது. நிஜாம்ஷாவை வெற்றி கொண்ட ராமராயர் அவனது தீராப் பகையையும் வளர்த்துக் கொண்டார்.

இப்ராஹிம் குதப்ஷாவினால் தான் நினைத்தபடி சுலபத்தில் கோல்கொண்டாவை அடைந்துவிட முடியவில்லை. உள்ளத்திலே பகையோடு நண்பனாக உறவாடியதை மறக்கவோ மன்னிக்கவோ தயாராக இல்லை ஆதில்ஷா. ஆகவே பீஜப்பூரின் படைகள் குதப்ஷாவைக் கோல்கொண்டாவுக்குப் போக விடாமல் வழி மறித்து வதைக்கலாயின. வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் நெஞ்சத் துடிப்புடன் உள்ள சித்தி ஹாரானது சீற்றமும் திறமையும் குதப்ஷாவின் படைகளைச் சீர்குலைய வைத்தன. தன் படைகளில் பெரும் பகுதியைப் பறிகொடுத்தபின் மிக்க சிரமத்தின் பேரில் தான் தலைநகரை அடைந்தார் குதப்ஷா. ஆனால் அங்குள்ள நிலைமையோ இன்னும் மோசமாக இருந்தது.

வேங்கடாத்திரியின் வீராவேசத்தினால் நாடே நலம் கெட்டுக் கிடந்தது. மக்கள் தாங்க முடியாத துன்பங்களுக்கு உள்ளாகித் தவித்துக் கொண்டிருந்தார்கள். பீஜப்பூர் படைகளின் பேய்த் தாக்குதலிலிருந்து ஒருவாறு தப்பி வந்த குதப்ஷா கோட்டையைக் காத்து நின்ற வீரர்களை ஒழுங்குபடுத்தி நாட்டிலே போர் வேட்டையாடி வரும் பொல்லாத வேங்கடாத்திரியை விரட்டும் வழியைப் பற்றித் திட்டமிடும் போது திடுக்கிடும் செய்தியொன்று வந்தது. அகமது நகரை அடிமை

**வெள்ளித்திரை — நேயர் விமர்சனம்**

அடுத்து விமர்சனத்துக்கு எடுத்துக்கொள்ளப்படும் படங்கள் :

**கலைக் கோவில் ; பொம்மை**

விமர்சனம் வந்து சேரவேண்டிய கடைசித் தேதி : 17—10—64



''சாருக்கென்ன? வழக்கம்போல இரண்டு இட்டிலி ஒரு பக்கெட் சாம்பாரா?''

✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦

கொண்ட அரவீட்டு முதல்வர் தம் படைகளுடன் கோல்கொண்டாவிற்கு முப்பதுமைல் தூரத்தில் தாரபள்ளி என்ற இடத்தில் வந்து பாடி இறங்கி யிருந்தார்; வேங்கடாத்திரிக்கு உதவியாகவே வந்திருக்கிறார் ராமராயர் என்பதை அறிந்த குதப்ஷா குமைந்து போனார். வேங்கடாத்திரியோடு ராமராயரும் சேர்ந்து விட்டால் சர்வ நாசம்தான். அவர்கள் ஒன்று சேர முடியாதபடி செய்தால்? அது முடியக் கூடிய காரியமா? நிஜாம்ஷாவின் படைகளைச் சிதறடித்துக் கொள்ளை கொண்ட பொருள்களோடு புதிய பலமும் போர்த் தளவாடங்களுமாக வந்திருக்கும் விஜயநகரப் படையெங்கே, ஆதில்ஷாவிடமே தோல்வி கண்ட குதப்ஷாவின் பலமெங்கே? சிந்திக்கவோ, தம் படைகளைச் சீர்திருத்தி அமைக்கவோ குதப்ஷாவிற்கு அவகாசமே அளிக்க வில்லை ராமராயர். ஆதில்ஷாவுக்காக அகமது நகரைத் தாக்கினரே தவிரக் கோல்கொண்டாவிடம்தான் அவரது கோபமெல்லாம். ஆகவே மின்னல் வேகத்தில் தமது திட்டங்களைத் தயாரிக்கலானார். வேங்கடாத்திரியை தலைவராய் அலீன் உல் முல்க் ஆகியோரின் உதவியுடன், கோல்கொண்டாவின் சுற்றுப்புறப் பகுதிகளை நாசமாக்கிச் சீர்குலைக்கும்படி கட்டளை பிறப்பித்தார். தமது சகோதரியின் புதல்வனும் கொண்ட வீட்டின் அதிகாரியுமான சித்திராஜு திம்ம ராஜா என்பவனுக்கு நாற்பதினாயிரம் வீரர்களுடன் கொண்டபள்ளியையும் மசூலிப்பட்டினத்தையும் தாக்கும்படி தாக்கீது அனுப்பினார். விக்கிரோத்திரி, சீதாபதி இருவருக்கும் எல்லூர், ராஜமகேந்திரபுரி ஆகிய பகுதிகளை ஒடுக்கும்படி ஓலை பறந்தது.

இப்படிக் குதப்ஷாவை நானா பக்கங்களிலும் விரோதிகள் சூழ்ந்து கொண்டு நெருக்கியபோது செய்வதறியாது திகைத்தார் இப்ரஹிம். இந்த இக்கட்டான சமயத்தில் ஒரு நல்ல செய்தியோடு வந்தான் ஒரு தூதுவன். கொண்ட வீடு கோட்டை தக்க பாதுகாப்பின்றி இருப்பதாகவும், அதைத் தாக்கினால் அரண் அமைத்துள்ள விரோதிகளை விரட்டியடிக்க முடியும் என்றும் உளவறிந்து வந்தவன் உறுதியாகச் சொன்னான். அது உண்மை. கொண்ட வீடு கோட்டைத் தலைவன் சித்தி ராஜு திம்மராஜா தனது பெரும் படையுடன் ராமராயரின் உத்தரவுப்படி கோல்கொண்டாவில் உள்ள பகுதியைத் தாக்கச் சென்றிருந்தான். ஆகவே இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடக் கூடாதென்று முடிவு செய்து குதப்ஷா தம்மிடமுள்ள படையின் பெரும் பகுதியுடன் கொண்டவீடு கோட்டையைத் தாக்கிக் கைப்பற்றத் தானே கிளம்பினார். அவருடன் முஸ்தபாகான், அலிம்கான், யாகூப்கான், சித்தருண்டதர்மாராவ் ஆகிய தளபதிகளும் சென்றார்கள்.

இத்தகைய ஒரு தாக்குதலை எதிர்பாராதவரா ராமராயர்? பலம் பொருந்திய கோல்கொண்டாக் கோட்டையிலே ஒளிந்திருக்கும் குதப்ஷாவை வெளியே கொண்டுவருவதற்காகவே இப்படி ஒரு சூழ்நிலையை உருவாக்கி இருந்தார் அரவீட்டு அசகாய சூரர். தம் பலமெல்லாம் திரட்டிக் கொண்டு கொண்ட வீடு கோட்டையைத் தாக்கிக் கைக் கொண்டார் குதப்ஷா. வெற்றிதான். ஆனால்.....?

ராமராயரின் திட்டப்படி யாராதிம்ம ராஜு என்ற தளபதி தனது உதவியாளனை வேலுகோட்டி சின்னதிம்ம நாயுடுவின் கீழ் ஒரு பெரும்படையை அனுப்பிக் கொண்ட வீட்டைக் காப்பாற்றும்படி பணித்தான்.

இந்த யாரா திம்மராஜு ராமராயருக்கு ஒன்றுவிட்ட சகோதரன் முறையாக வேண்டும். எழுபது வயது இளைஞரான ராமராயர் தம் உறவினர்கள் அத்தனை பேரையும் அரசியல் சதுரங்கத்தின் காய்களாக்கி விளையாடிக் கொண்டிருந்தார்.

சின்னத் திம்மன் கொண்ட வீடு கோட்டையை முற்றுகையிட்டு உள்ளிருந்தோரை ஓட்டம் எடுக்கும்படி செய்தான். ஆனால் குதப்ஷாவின் படைகளில் பெரும் பகுதி முஸ்தபாகானின் தலைமையில் கோட்டையை விட்டு வெளியேறிக் கிருஷ்ணா நதியைக் கடந்து கர்நூல் ஜில்லாவின் வடக்குப் பகுதியில் புகுந்து வஞ்சம் தீர்க்கலாயின. வீரர்கள் அங்குள்ள பாயா என்ற வகுப்பாரைத் தாக்கி அவர்களிடையே பெரும் பீதியை உண்டாக்கினார்கள். இவ்வேளையில், யாரா திம்ம ராஜுவும், திம்ம நாயுடுவும் முஸ்தபாகானை முறியடித்து அவனிடமிருந்து ஏராளமான யானைகளைக் கைப் பற்றினார்கள். தோற்று ஓடும் விரோதிகளை அவர்கள் நாட்டினுள்ளேயே புகுந்து துரத்திச் சென்று பாடம் கற்பிக்க எண்ணினார்கள் ராமராயரின் தளபதிகள். இந்த எண்ணத்துடன் கிருஷ்ணா நதிக்கரையை அடைந்த போது குதப்ஷாவின் தளபதிகள் நதியின் நடுவில் உள்ள ஒரு தீவில் தங்கி ஆற்றைக் கடக்கும் போது தங்களைத் தாக்கி வெற்றி கொள்ளத் திட்டமிட்டிருப்பதை உணர்ந்தார்கள். ஆனாலும் திம்ம ராஜுவும், நாயுடுவும் தங்கள் திட்டத்தை மாற்றிப் பின்வாங்கிவிட வில்லை. துணிவுடன்

ஆற்றில் இறங்கிய போது இரு சாராருக்கும் பலமான போராட்டம் நடந்தது. தூய ஆடை புனைந்து ஓடிக் கொண்டிருந்த நதிக் கன்னி கிருஷ்ணா முஸ்லிம்களின் ரத்தத்தில் தோய்ந்த துவராடை புனைந்து துக்கம் கொள்ளலானாள்.

தோல்வியிலும் மனமுடைந்த குதுப்ஷா தலை நகரை நோக்கி ஓடினார். வெற்றி வெறி கொண்ட யாரா திம்மராஜுவின் படைகள் குதுப்ஷாவின் நாட்டை நாசமாக்கிக் கொண்டு முன்னேறின. நாட்டின் பத்திரத்தைக் காத்து நின்ற கோட்டைகள் ஒவ்வொன்றாக விஜயநகரப் படைகளின் கையில் சிக்கலாயிற்று. தேவரகொண்டா கோட்டை ஒன்றுதான் தாக்குப் பிடிக்க முயன்றது: கடைசியில் அதுவும் தலை வணங்கியது. ஓட்டப்பள்ளி, நாதுபாடு, தேவுபள்ளி, சித்தேலா, நல்லகொண்டா, அநுவபள்ளி ஆகிய கோட்டைகள் ஒன்றன்பின் ஒன்றாகச் சரியலாயின. வேறு பகுதிகளிலோ வேங்கடாத்திரியும் ஜகதேவராயரும் விஜயநகரப் படைகளுக்கு வெற்றிமேல் வெற்றியாக வாங்கிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். கோவில் கொண்டா, பாங்கல், கான்பூரா ஆகியவை விஜயநகரின் பகுதிகளாயின.

இந்த நிலையில் மேலும் போராடிக் கொண்டிருப்பதில் பயனில்லை என்பதை உணர்ந்த இப்ராஹிம் குதுப்ஷா ராமராயருக்குச் சமாதானத் தூதனுப்பினார். தாம் கைப்பற்றிய பகுதிகளில் கான்பூராவையும், பாங்கலையும் தமக்குக் காணிக்கையாக அளித்தாலும் முற்றுகையை முடித்துக் கொண்டு தம் நாடு திரும்புவதாகப் பதிலனுப்பினார் ராமராயர். போரை நிறுத்த எதையும் கொடுக்கத் தயாராக இருந்தார் குதுப்ஷா. ஆகவே தமது சுதந்திரத்துக்கு விலையாக ராமராயரின் விருப்பப்படியே அவ்விரு கோட்டைகளையும் விஜயநகரின் பகுதிகளாக்கிச் சமாதானத்தை வாங்கினார்.

ராமராயர் வெற்றி வீரராக விஜயநகரம் திரும்பினார். ஆனால் அந்த வெற்றியே ஒரு மகத்தான சாம்ராஜ்யத்தின் அழிவுக்கான அஸ்திவாரமாக அமைந்து விட்டதை அவர் அறியவில்லை. அடிபட்ட இரண்டு சுல்தான்களின் ஆத்திரம் பிளவுபட்டுக் கிடந்த முஸ்லிம் இனத்தின் ஒற்றுமைக்கும் விஜயநகரத்தின் அழிவுக்கும் வழி வகுக்கலாயின. பாமினி சுல்தான்களாகிய தாங்கள் தலை நிமிர்ந்து வாழ வேண்டுமானால் அளவுக்கு மீறிப் பலம் பெற்று வரும் அண்டை நாடான விஜயநகரத்தை அடக்கி ஒடுக்கியாக வேண்டும் என்ற அவசியத்தை உணர்ந்து கொண்டார்கள் பாமினி சுல்தான்கள். தான் பட்ட பரிபவத்துக்குப் பழிவாங்கியே தீருவது என்று சபதமிட்டார் கோல்கொண்டாவின் காவலர் இப்ராஹிம் குதுப்ஷா. தம் இனத்தவர்களின் இணைப்பினால்தான் விஜயநகரத்தை வெற்றி கொள்ள முடியும் என்ற முடிவுக்கு வந்தவர் அதற்கான வழி வகைகளைப் பற்றித் திட்டமிடலானார். எதையும் அழகாக, ஆவேசமாக, கேட்பவர்களின் உள்ளத்தைக் கவரும் வகையில் சொல்லக்கூடிய இஸ்லாம் பற்றுக் கொண்ட பிரசாரகர்களை எல்லாம் தேடிப் பிடித்து வருமாறு நாட்டின் நானா பக்கங்களிலும் தூதுவர்கள் அனுப்பப்பட்டார்கள். முஸ்லிம் மதக் கோட்பாடுகளை நன்கறிந்த இமாம்களும் உலேமாக்களும் ஒன்று கூடும்படி ஏற்பாடு செய்தார் குதுப்ஷா. (தொடரும்)

## ஈழப் பெண் குலத்தின் இழப்பு



ஈழத் தமிழ்ப் பெரியாரும் பேரறிஞருமான செனட்டர் க. நடேசப் பிள்ளையின் மனைவியாரான ஸ்ரீமதி சிவகாம சுந்தரி அம்மையார் சமீபத்தில் காலமானது குறித்து வருந்துகிறோம். இந்த அம்மையார் ஈழப் பெரியார்களில் ஒப்புயர்வற்று விளங்கிய சர் பொன்னம்பலம் இராமநாதனின் புதல்வியாராவார். இவர் சுன்னாகம் இராமநாதன் கல்லூரியில் கல்வி பயின்று பிறகு சென்னை சென்று சங்கீதப் பயிற்சி பெற்றார். இலங்கை திரும்பியதும் அப்பொழுது பரமேசுவராக் கல்லூரியின் அதிபராக இருந்த ஸ்ரீ நடேசப் பிள்ளையை மணந்து கொண்டார். கணவருக்கு ஏற்ற வாழ்க்கைத் துணைவியாகச் சகல அம்சங்களிலும் விளங்கிய இவர் கணவரைப் போலவே கல்வி அபிவிருத்திக்கு அரும் பணிகள் ஆற்றினார். தமது அன்னையாரான லேடி ராமநாதன் மறைவுக்குப் பின்னர் இராமநாதன் கல்லூரியின் தலைவர் பதவியை ஏற்றுத் திறமையுடன் அக் கல்லூரியை நடத்தி வந்தார். இந்து சமயப் பெண் குலத்தின் திலகமாக விளங்கிய அவர் காலமாகியது தமிழ்ப் பெண்மணிகளின் ஈடு செய்ய முடியாத ஒரு பெரு நஷ்டம். இலங்கைப் பெண் கல்விச் சரித்திரத்தில் அவரது பெயர் நீண்ட நாட்களுக்குப் பசுமையாக இருக்கும்.




# காலகேட் பேபி பவுடர்

## மிக நேர்த்தியானது
## ...பெரிய டப்பாகூட

அவ்வளவு அதிக இதமளிப்பது.
அவ்வளவு அதிக மணமுள்ளது.
குழந்தையின் இளஞ் சருமத்திற்கு
மிகவும் உகந்தது



அதிகப் பவுடர்
அதிகச் சிக்கனம்




**வாணி தமிழ் இங்கிலீஷ் போதினி.**
90 நாட்களில் தமிழ் மூலம் ஆங்கிலம் தானே வெகு சுலபமாகப் படிக்க, பேச, எழுத, சுலபமாகக் கற்க பெரிய புத்தகம்.
விலை தபால் செலவு உட்பட ரூ. 6-25.

**ஐசுவரியம் (குடிசைத் தொழில்)**
சோப், இங்கி, பத்தி, ஸ்னோ போன்ற 206 புதுத் தொழில்கள் அடங்கியது.
விலை ரூ. 4-00. வி. பி. 0-85.

**தமிழ் ஹிந்தி சுபோதினி**
தமிழ் மூலம் சுலபமாக ஹிந்தி படிக்க பேச, எழுத, கற்க முடியும்.
விலை ரூ. 2-50. வி. பி. 0-85.

**குடும்ப இலகு வைத்தியம்**
பச்சிலை மூலிகைகள் கொண்டு ஆரோக்கியம், பலம்பெற வழிகாட்டும்.
விலை ரூ. 2-50. வி. பி. ரூ. 1-00.

**மாட்டு வாகடம் (பசு வைத்தியம்)**
கால்நடைகளின் நோய்களைப் போக்கும்.
விலை ரூ. 2-00 வி. பி. 85.

**வாணி புக் டிபோ (K)**
3. மலையப்பெருமாள் தெரு. ரூம் நெ. 5
சென்னை – 1

## பருக்கள் மறைந்து! விடுகின்றன

சருமம் மிருதுவாகவும் [illegible]

நிக்ஸோடேர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப்பருக்கள் எல்லாம் மறைந்துவிடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடேர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழவழப்பாகவும் மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடேர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள் கட்டிகள் செந்நிறத் தழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும், பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்ட்டிடம் நிக்ஸோடேர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் இருக்கச் செய்யும் என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடேர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

# வளரும் விஞ்ஞானம்

ஒரு காலத்தில் மீன் பிடித்தல் விளையாட்டாகவும் பொழுதுபோக்காகவும் இருந்தது. தூண்டிலைப் போட்டு விட்டு மணிக்கணக்கில் காம்பைக் கையில் பிடித்துக் கொண்டு காத்திருந்தால் எப்பொழுதாகிலும் ஒரு மீன் அகப்பட்டுக் கொள்ளும். இதைத் தவிர வியாபார நிமித்தம் பெரும் வலைகள் வீசி மீன்களைப் பிடிப்பதும் உண்டு. இம்முறையில் சிறிய மீன்கள் பெரிய மீன்கள் எல்லாமே அகப்பட்டு இறந்து விடும்.

இப்பொழுது மீன் பிடிப்பதில் ஜெர்மனியர் புதிய முறையைக் கையாண்டு வருகிறார்கள். குளம், ஏரி, ஆறு ஆகியவற்றின் நீர் மட்டத்துக்குக் கீழே மின்சார விசையை—பாஸிடிவ் நெகடிவ் — சக்தியைச் செலுத்தினால், அடியில் உள்ள மீன்களெல்லாம் நீர் மட்டத்துக்கு வந்து விடுகின்றனவாம். அவற்றிலிருந்து தங்களுக்குத் தேவையான பருத்த மீன்களைப் பிடித்துக் கொள்ள முடிகிறதாம். குட்டி மீன்களை ஒதுக்கி விடவும், அவை நன்றாகப் பருக்கவும் விட முடிகிறது என்கின்றனர். இதனால் மீன் விரயம் ஆவதில்லை. மீன்களின் சுகாதார நிலைமையையும் ஆராய்ந்து மீன் பண்ணைகளைப் பேண முடிகிறதாம். உணவுப் பற்றாக்குறையைச் சமாளிக்க, இந்தப் புது ஆராய்ச்சியும் உதவியாக இருக்கலாம்.

ஃ ஃ ஃ

நமது நாட்டில் போதிய சத்துள்ள உணவை மக்கள் உண்பதில்லை என்று குறைப்பட்டுக் கொண்டு வரும் போது, மேலை நாட்டில் அதிக சத்துள்ள உணவு உட்கொண்டு நோய்களுக்கு ஆளாகி வருவதாகக் கூறுகிறார்கள்.

பிராணிகள் கொழுப்பு அதிகம் உடலில் சேருவதால் அதிக காலம் வாழ முடியாதென்பது ஆராய்ச்சிகளில் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பிராணிக் கொழுப்பினால் ஏற்படும் வியாதிக்கு ''ஆர்ட்டெரியா ஸெலிரானிஸ்'' என்று பெயர். ரத்தக் குழாய் உட்புறங்களில் கால்ஷியம் என்ற சுண்ணாம்புச் சத்து படிய ஆரம்பித்துக் குழாய் வழி அடைபட ஆரம்பிக்கிறதாம். பிராணிகள் கொழுப்பில், ''சொலஸ்ட்ரின்'' என்ற சத்து உள்ளது. தாவரக் கொழுப்பில் இது கிடையாது. அதனால்தான் வைத்திய நூல்கள் தாவரக் கொழுப்பை உபயோகிக்கும்படி சிபாரிசு செய்கின்றன. தாவரக் கொழுப்புகளிலுள்ள சில சத்துக்கள், ரத்தத்திலுள்ள கொழுப்புக்களையும் கரைக்கக் கூடியன என்று வைத்திய நிபுணர்கள் ஆராய்ந்து கண்டு பிடித்திருக்கிறார்கள்.

மொத்தத்தில் நம் முன்னோர்கள் மனித குலத்துக்கு உபதேசம் செய்த சைவ உணவு முறையே சிறந்த முறை என்ற உண்மையை மீண்டும் மேனாட்டு வைத்திய ஆராய்ச்சி வற்புறுத்துகிறது.

ஃ ஃ ஃ

ஒவ்வொரு ஸ்தாபனமும் தத்தம் ஐம்பது ஆண்டு நிறைவு விழா, நூற்றாண்டு விழாக்களை, ஒவ்வொரு வகையில் கொண்டாடி வருவதைப் பார்க்கிறோம்.

மேற்கு ஜெர்மனியில் உள்ள ''மானெஸ்மான்'' என்ற எஃகுக் குழாய்கள் தயாரிக்கும் கம்பெனியார் தங்கள் எழுபத்தைந்து ஆண்டு நிறைவு விழாவைப் புது மாதிரி கொண்டாடத் தீர்மானித்திருக்கின்றனர்.



டஸ்ஸல் டார்ப் என்ற நகரத்தில் 330 அடி உயரத்துக்குக் காரையோ, சுண்ணாம்போ, சிமென்டோ இன்றி முழுக்க முழுக்க எஃகுத் தகடுகளினாலேயே ஒரு கோபுரம் கட்டப் போகிறார்களாம். ஒவ்வொரு தகட்டின் அடிச் சுற்றளவு 23 அடிதான்; கனம் 22 மில்லி மீட்டர்தான்.

இந்தக் கோபுரத்தின் உச்சியில், இன்னும் 150 அடி உயரத்துக்கு ஐந்து அடுக்கு மாளிகை கட்டப் போகிறார்களாம்! இந்த மாளிகையில் யார் குடியேறப் போகிறார்கள் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? அங்கு ஒரு ஹோட்டல் நடத்தப் போகிறார்களாம்!

இந்த ஹோட்டல் கட்டடத்தின் சுவர் முழுதும் கண்ணாடிகளால் வேயப்பட்டிருக்கும். இந்த ஹோட்டலில் 170 ஜன்னல்கள் அமைக்கப் போகிறார்கள். ஜன்னல்களை யொட்டி, உட்காரும் ஆசனங்கள் அமைக்கப் போகிறார்களாம் — ஜன்னலில் உட்கார்ந்தபடியே வான மண்டலத்தையும் கீழேபூமண்டலத்தையும் வேடிக்கை பார்க்கலாம்.

ஆமாம்! இந்த ஹோட்டலை எப்படிப் போய் அடைவது? மின்சார 'லிப்டு'களின் மூலமாகத்தான். மணிக்குப் பதினாறு மைல் வேகத்தில் செல்லக்கூடிய இரண்டு லிப்டுகள் இரவு பகல் இயங்கிக் கொண்டிருக்குமாம்!

இதைக் கட்டி முடிக்க ரூ. 50 லட்சம் செலவாகுமாம். 1965ல் இந்தக் கட்டடம் கட்டி முடிக்கப்படும் என்று எதிர்பார்க்கிறார்கள்!

# தொழில் நினைவுகள்

## இதம் நிறைந்த இதயம்

பிரபல நடிகராக விளங்கிய சார்லஸ் கோபர்ன் என்பவரை ஒரு நிருபர் பேட்டி காண வந்தார். "வெற்றிப் பாதையில் நடக்க உதவுவது மூளைத் திறனா? உடல் வலிமையா? கல்விச் சாதனையா?" என்பது தான் அவருடைய முதல் கேள்வி. முக்கியமான கேள்வியும் கூட!

கோபர்ன் தலையை ஆட்டினார். "ஊஹூம்! இவை ஓரளவு உதவலாம். ஆனால் இவைகளையெல்லாம் விட முக்கியமான விஷயம் வேறு ஒன்று இருக்கிறது. சரியான நேரத்தைத் தெரிந்துகொள்வது என்பதுதான் அந்த விஷயம். வெற்றிக்கு அஸ்திவாரமான விஷயம்" என்றார் கோபர்ன். நிருபரின் முகத்தில் படர்ந்த கேள்விக் குறியைக் கண்டு அவரே விளக்கம் கொடுத்தார்.

"இப்பொழுது செய்யலாமா? செய்யக் கூடாதா? இப்பொழுது பேசலாமா? மௌனமாக இருக்க வேண்டுமா? என்று தருணத்தை நிர்ணயம் செய்யும் சாமர்த்தியம் இருக்கிறதே. அதுதான் வெற்றிப் பாதைக்குப் பிரதான வழிகாட்டி" என்று விவரித்தார் கோபர்ன்.

இந்திய சிவில் சர்வீஸ் துறையில் புகுந்து வெற்றியுடன் பணியாற்றி ஓய்வு பெற்று இப்போது வழக்கறிஞராகத் தொழில் நடத்தும் திரு ஆர். எம். சேஷாத்திரி தம் ஐ. ஸி. எஸ். அலுவல் நாட்களில் கிடைத்த சில அனுபவங்களை விவரிக்கக் கேட்ட எனக்குச் சார்லஸ் கோபர்னின் விளக்கம் அடிக்கடி நினைவுக்கு வந்தது.

பொதுவாக வெள்ளைக்கார அதிகாரிகள் திறமைக்கு மதிப்புக் கொடுத்து நேர்மையுடன் நடந்துகொள்ளக் கூடியவர்கள்தான். ஆனாலும் சில சந்தர்ப்பங்களில் சிலர் காரணமற்றவிருப்பு வெறுப்புக்களுக்கு இடம் கொடுப்பதும் உண்டு. திரு சேஷாத்திரி ஆரம்ப நாட்களில் சப்-கலெக்டராகப் பணியாற்றிய போது வெள்ளையர் ஒருவர் ஜில்லா அதிகாரியாக இருந்தார். காரியாலயத்துக்கு வந்து போன ஒரு வயோதிக தாசில்தாரைச் சுட்டிக் காண்பித்து, "இந்தக் கிழம் ஓர் உதவாக்கரையாகத்தான் இருக்க வேண்டும். இவர்களைப் போன்றவர்களால் தான் இலாக்கா குட்டிச் சுவராகிறது" என்ற ரீதியில் அந்த அப்பாவி தாசில்தாரின் உருவத்திலிருந்தும், தோற்றத்திலிருந்தும் ஓர் அபிப்பிராயத்தை உண்டாக்கிக் கொண்ட ஜில்லா அதிகாரி அலட்சியமாகப் பேசினார்.



ஆர். எம். சேஷாத்திரி

சப்-கலெக்டர் சேஷாத்திரி எந்தவிதமான பதிலும் சொல்லவில்லை. அவருக்குத் தெரியும் எப்போது பேச வேண்டும், எப்போது மௌனமாக இருக்க வேண்டுமென்று.

மற்றொரு தாலூக்கா ஆபீசுக்கு இருவரும் போனார்கள். அங்கிருந்த தாசில்தார் இளைஞர். கனகச்சிதமாக ஆடைகள் அணிந்து நாஜூக்காக வளைய வந்தார். "பார்த்தீர்களா இவரை? இவர் நிச்சயமாக ஒரு திறமையுள்ள ஊழியராகத்தான் இருக்க வேண்டும்" என்றார் ஜில்லா அதிகாரி. அப்போதும் சப்-கலெக்டர் ஒன்றும் பேசவில்லை.

தலைமைக் காரியாலயத்துக்குத் திரும்பியவுடன் சப்-கலெக்டர் இந்த இரண்டு தாசில்தார்களுடைய 'பெர்சனல் பைல்'களையும் வரவழைத்து முதல் காரியமாகப் படித்துப் பார்த்தார். வயோதிகத் தாசில்தாரைப் பற்றிப் பல பெரிய அதிகாரிகள் சிலாகித்துப் பாராட்டிக் குறிப்பு எழுதியிருந்தார்கள். அத்தனைக்கத்தனை இளையபெருமானைப் பற்றி இறக்கமாகவே எழுதப்பட்டிருந்தது.

சப்-கலெக்டர் இந்தக் குறிப்புக்களைத் தொகுத்து எடுத்துக் கொண்டு போய் ஜில்லா கலெக்டரிடம் காண்பித்தார். தோற்றத்தைப் பார்த்து ஏற்றத் தாழ்வை எடை போட்ட அந்தக் கலெக்டர் "நான் கற்றுக் கொள்ள வேண்டியது நிறையத்தான் இருக்கிறது" என்று பச்சாத்தாபத்துடன் பதில் சொன்னாராம்! நல்ல மனிதர்தான்!

1942ம் ஆண்டு. "வெள்ளையனே வெளியேறு!" கோஷம் நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் எதிரொலித்த காலம். திரு சேஷாத்திரி ஜில்லா கலெக்டராகப் பணியாற்றி வந்தார்.

ஒரு நாள் மாலை அவர் டென்னிஸ் ஆட்டத்தில் ஈடுபட்டிருந்த போது தான் காந்திஜி கைதான தகவல் சர்க்கார் பரிபாஷைத் தந்தியில் அவருக்குக் கிடைத்தது. சில நிமிடங்களில் ஜில்லா போலீஸ் சூப்பிரண்டெண்டும் தமக்குக் கிடைத்த அதே தந்தியை எடுத்துக் கொண்டு வந்து

சேர்ந்தார். ஆலோசனை கேட்பதற்கு முன் தந்தியின் பரிபாஷை விளக்கமே அவருக்குத் தேவையாக இருந்தது. இருவரும் கலவரங்களைச் சமாளிக்கும் யோசனையில் தீவிரமாக ஆழ்ந்தார்கள்.

காந்திஜி கைதான செய்தி காட்டுத் தீ போல் ஊரில் பரவி விட்டது. உள்ளூர் அரசியல் பிரமுகர் ஒருவர் மறுநாள் மாலையில் ஒரு பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்து அறிவிப்பும் கொடுத்து விட்டார்.

உணர்ச்சி வேகத்தில் எந்த விதக் கலவரமும் நேரலாம் என்று அரசாங்கம் அஞ்சியது. கலெக்டர் முன்னெச்சரிக்கையாக 144ம் பிரிவின் கீழ் தடையுத்தரவைப் பிரகடனம் செய்து விட்டார். பொதுமக்களின் நலனுக்கு அவர் பொறுப்பேற்றாக வேண்டுமே.

ஆனால் மறு நாள் காலையிலிருந்து வந்த செய்திகள் உற்சாகம் அளிப்பதாக இல்லை. தடையுத்தரவை மீறி அந்த அரசியல் தலைவர் எப்படியும் பொதுக் கூட்டம் நடத்தத் தயாராகி விட்டாராம்! பொதுமக்களின் உணர்ச்சி கட்டுக்கடங்காத நிலையில் இருக்கிறது என்றுதானே பொருள்!

எப்படியாவது அமைதியைக் கடைப்பிடித்தாக வேண்டும் என்ற கொள்கையுடைய கலெக்டர் சேஷாத்திரி அந்தத் தலைவரை வரவழைத்து மனம் விட்டுப் பேசினார். ''ஐயா! நீங்கள் ஓர் அஹிம்ஸாவாதி! உங்கள் தலைவர் காந்திஜியோ அஹிம்ஸையையே லட்சியமாகவும் குறிக்கோளாகவும் கொண்டவர். அவர் பெயரில் இன்று நீங்கள் நடத்தவிருக்கும் கூட்டத்தில் பொதுஜனங்கள் ஆவேச உணர்ச்சியில் கலவரத்தில் இறங்கி விட்டால் அதைத் தடுக்கப் போலீஸார் நடவடிக்கை எடுக்க நேரிடும். இரு பக்கத்திலும் சேதம் ஏற்படும். காந்திஜி ஒருநாளும் இந்த விதமான பலாத்காரச் செயல்களை விரும்பாதவர் என்று உங்களுக்குத் தெரியும். அவருக்கு மதிப்புக் கொடுக்கும் வகையிலாவது நீங்கள் இன்றைய கூட்டத்தை ரத்து செய்யக் கூடாதா?'' என்றார். ''கூட்டம் நடத்த இன்னும் ஒரு சந்தர்ப்பம் கிடைக்கும். ஆனால் கலவரத்தில் இழந்த உயிர்களை மீட்க மற்றுமொரு சந்தர்ப்பம் ஏது?''—இது தான் கலெக்டரின் வாதம்.

தலைவர் கூட்டத்தை ரத்து செய்ய விரும்பவில்லை. ஆனால் கலெக்டரின் வேண்டுகோளை மாத்திரம் பொதுமக்களிடம் தெரிவித்துவிட்டுக் கூட்டத்தை முடித்து விடுவதாக உறுதிமொழி கொடுத்தார். கூட்டத்தை நடத்த அவர் அனுமதியும் பெற்றுப் போனார்.

மாலையில் மைதானத்தில் ஜனத்திரள் சேர்ந்தது. ரிசர்வ் போலீஸ் படையும் எந்தவிதமான அசம்பாவிதத்தையும் சமாளிக்கத் தயாராக வந்திருந்தது.

கூட்டத்தின் தலைவர் வேறு ஒன்றும் பேசவில்லை. கலெக்டருடன் நடந்த சம்பாஷணையை விவரித்தார். கூட்டத்தை முடித்தார். பொதுஜனங்கள் அஹிம்ஸாவாதியான காந்திஜிக்கு மதிப்புக் கொடுக்கும் வகையில் எந்த வித வேகத்துக்கும் அடிமையாகாமல் சாந்தமூர்த்திகளாகக் கலைந்து போனார்கள். போலீஸாருக்கு எந்தவித வேலையுமில்லை.

இந்த ஓர் அசாதாரண அமைதி நிகழ்ச்சிக்குக் கலெக்டர் சேஷாத்திரி மேலதிகாரிகளிடமிருந்து பெற்ற பரிசு சூடான கண்டனக் கடிதம்தான். தடையுத்தரவை மீறிய பொதுமக்களைக் குறைந்தபட்சம் தடியடிப் பிரயோகமாவது நடத்திக் கலைத்து விரட்டிச் சட்டத்தால் சமாதானத்தை அமுல் செய்யத் தவறி விட்டார் என்று கண்டித்திருந்தார்கள். துப்பாக்கிப் பிரயோகத்தையோ, தடியடியையோ வரவேற்காத முறையில், சாத்விகமான முறையில் கலைந்த அந்தக் கூட்டத்துக்கு இந்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வர வேண்டிய அவசியமில்லை என்று தாம் நினைத்ததாகக் கலெக்டர் பதில் எழுதினார்.

வேறு பல இடங்களில் அதே நேரத்தில் தடியடி தர்பார் நடத்தச் செய்த பல ஜில்லா அதிகாரிகளுக்குப் பாராட்டுதலைத் தெரிவித்த சர்க்கார், சேஷாத்திரிக்கு உடனடியாக வேறு ஊருக்கு மாற்றுதல் உத்தரவு கொடுத்துத் தங்கள் மனக் கசப்பைக் காட்டிக் கொண்டார்கள்.

ஆனால் தலைமைப் பீடத்திலிருந்த ஓர் அதிகாரி மாத்திரம் 'தமது பார்வைக்கு' என்று சொந்த ஹோதாவில் திரு சேஷாத்திரிக்கு எழுதிய கடிதம் ஒன்றில் சேஷாத்திரி அமைதிப் பராமரிப்பையும், சட்டத்தையும் புதுக் கோணத்திலிருந்து பார்த்துக்கொண்டதைப் பாராட்டியிருந்தாராம்!

நடக்காத துப்பாக்கிப் பிரயோகத்துக்காகவும் அவருக்கு நற்சாட்சி கிடைக்கவில்லை. நடந்த ஒரு துப்பாக்கிப் பிரயோக விஷயத்திலும் அவர் முடிவு ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

தொழிற்சாலை ஒன்றில் வேலை நேரத்தில் ஒரு தொழிலாளி மரணமடைந்து விட்டான். தொழிற்சாலை டாக்டருக்கு எதிராக உடனடியாக இதர தொழிலாளிகள் கோஷம் எழுப்பினார்கள். அவ்வளவுதான்! பயந்து நடுங்கிய தொழிற்சாலை நிர்வாகம் போலீஸ் உதவியில் தஞ்சம் புகுந்தது. போலீஸார் உடனடியாக வந்து துப்பாக்கிப் பிரயோகம் செய்து அமைதியை நிலைநாட்டினார்கள்.

இந்தக் கலவர விஷயம் காதுக்கெட்டினவுடன் ஜில்லா அதிகாரி என்ற பொறுப்பில் கலெக்டர் சேஷாத்திரி தொழிற்சாலைக்கு விரைந்து சென்றார். போலீஸார் மீது தொழிலாளிகள் கல்வீச்சு நடத்தினதாகவும், தற்காப்புக்காகப் போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் நடத்தினதாகவும் போலீஸ் அதிகாரி சொன்னார். தொழிற்சாலையைச் சுற்றியுள்ள காம்பவுண்டுக்கு வெளியே சுமார் இருநூறு கஜங்களுக்கப்பால் இரண்டு தொழிலாளிகள் முதுகில் குண்டடி பட்டுக் குப்புற விழுந்து கிடந்தார்கள். அவர்கள் அப்படியே ஊர்ந்து போனதற்கு ரத்தத் தடமும் இருந்தது. தொழிலாளர்களை ஓட ஓட விரட்டித் தொழிற்சாலைக்கு வெளியேயும் வந்து துப்பாக்கிப் பிரயோகம் நடந்திருக்கிறது என்று நிதர்சனமாகத் தெரிந்தது. கலெக்டர் இப்படித் துப்பறிபவராக மாறுவார் என்று போலீஸ் அதிகாரி எதிர்பார்க்கவில்லை. அவர் சரணாகதி அடைந்தார்.

ஆனால் கலெக்டர் மன்னிக்கத் தயாராக இல்லை. போலீஸார் அவசரப்பட்டுச் சூழ்

Light and soft through

**Dralon®**

A FIBRE OF
BAYER, GERMANY

® REGISTERED TRADE MARK OF
FARBENFABRIKEN BAYER AG LEVERKUSEN

# ட்ராலான்®

இந்த அபூர்வமான
நூல் துணிமணிகளில்
மதிப்புமிக்கதான
'கார்டன்ஸ் ரோஸ்'
துணிமணிகளில்
உபயோகிக்கப்
பட்டிருக்கிறது.

## ட்ராலான்®

'கார்டன்ஸ் ரோஸ்'
துணிமணிகளுக்கு நீங்கள்
விரும்பும் எல்லாவற்றையும்
கொடுக்கிறது.

* மிகவும் மென்மை மற்றும் குளுமை
* மடிப்புக்கலையாத தன்மை
* உண்மையிலேயே
கறைபடியாத தன்மை
* பட்டுப்போன்ற உணர்ச்சி,
எழிலான தோற்றம்

பல மனங்கவர் பாணிகள்
பிரபலமான கடைகளில்
கிடைக்கிறது.

தயாரிப்பவர்கள்.
தி கார்டன் ஸில்க் வீவிங் பேக்டரி, சூரத்.

வியாபார விபரங்களுக்கு:
பாரதி & கோ. கடியால் கல்லி,
மூல்ஜி ஜேதா மார்க்கெட், பம்பாய்.

CBG-6 TAM




# இவர்களுடைய வளமான வருங்காலம் இப்பொழுதே திட்டமிடப்படுகிறது



இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கின் ரெக்கரிங் டிபாஸிட் திட்டத்தின் சேமிப்பைக்கொண்டு.

குறைந்த பட்சம் ரூ. 5/-லிருந்து அதிக பட்சமாக அதன் பெருக்குத் தொகை ரூ. 500/- வரையில், டிபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பிரதிமாதம் டிபாஸிட் செய்யும் தொகையான :

| | ரூ. 5/- | ரூ. 10/- | ரூ. 50/- | ரூ. 100/- | ரூ. 500/- |
|---|---|---|---|---|---|
| கீழ்க்கண்டபடி பெருகும் : | | | | | |
| 12 மாதங்களில் | ரூ. 61.00 | ரூ. 122 | ரூ. 610 | ரூ. 1,220 | ரூ. 6,100 |
| 24 மாதங்களில் | ,, 124.50 | ,, 249 | ,, 1,245 | ,, 2,490 | ,, 12,450 |
| 36 மாதங்களில் | ,, 192.00 | ,, 384 | ,, 1,920 | ,, 3,840 | ,, 19,200 |
| 48 மாதங்களில் | ,, 262.00 | ,, 524 | ,, 2,620 | ,, 5,240 | ,, 26,200 |

# இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் லிட்.

தலைமைக் காரியாலயம் : 151, மவுண்ட் ரோட், சென்னை-2

உங்களுக்கு சேவை செய்வதற்காக 100 க்கு மேற்பட்ட கிளை அலுவலகங்கள் இந்தியாவின் முக்கிய இடங்களில். இதில் தமிழ் நாட்டில் மட்டும் 60 க்குமேற்பட்ட கிளை அலுவலகங்கள் உள்ளது.

IOB-17.5A

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

கே. எம். நஞ்சப்பா
ஜெனரல் மானேஜர்

நிலைமைக் குழப்பி விட்டார்கள் என்றுதான் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் ரிப்போர்ட் அனுப்பினார். பிறகு சாவகாசமாக நிலைமையைக் கேள்வி ஞானமாகத் தெரிந்து கொண்ட போலீஸ் உயர்அதிகாரிகள் 'துப்பாக்கிப் பிரயோகம் நடத்தியிராவிட்டால் நிலைமை கட்டுக்கடங்காமல் போயிருக்கும்' என்று அனுப்பிய ரிப்போர்ட்தான் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

கோவில் திருவிழா ஒன்று. ஏராளமான கூட்டம். குறிப்பிட்ட நேரத்துக்குப் பிறகு யாரையும் உள்ளே விடக் கூடாதென்று போலீஸாருக்கு உத்தரவு. அந்த நேரமும் வந்து விட்டது.

அந்தத் திருவிழாவில் கலந்துகொள்ள விருந்த ஒரு மந்திரி சற்றுச் சாவகாசமாக வந்து சேர்ந்தார். வாசலிலிருந்த போலீஸ் காவலருக்கு வந்திருப்பவர் மந்திரி என்று தெரியாது. கையை நீட்டித் தடுத்து நிறுத்தி விட்டார். கடமையைத்தான் செய்தார் அந்தக் காவலர்.

மந்திரிக்கு ஒரே கோபம். ஆவேசம். இந்தக் கலெக்டரின் கீழ் சட்டம், ஒழுங்குப் பராமரிப்பு சரியாகவே நடக்கவில்லை என்று சீறினார். அந்தக் குறிப்பிட்ட போலீஸ் காவலரை கலெக்டர் உடனடியாக வேலைநீக்கம் செய்யாமல் இருந்ததோடு அவர் தமக்கு இடப்பட்ட உத்தரவைத்தான் நிறைவேற்றினார் என்று ஆமோதித்ததற்காக கலெக்டரையே விளக்கம் கேட்டார்கள்.

காவலரைக் கண்டிப்பாக வேலைநீக்கம் செய்ய முடியாது என்று கலெக்டர் மறுத்து விட்டார். விளைவு? நிர்வாகம் காவலர்மேல் காட்ட வேண்டிய கடுமையில் ஒரு பாகத்தை கலெக்டர் மேலேயே காண்பித்தது ஒரு 'ப்ளாக் மார்க்' கொடுத்தது!

உணவுப் பற்றாக்குறை மாவட்டம் ஒன்றில் அவர் கலெக்டராக இருந்த காலம். அந்த மாவட்டத்தின் உணவுத் தேவைகளைப் பற்றி நேரடியாகத் தெரிந்துகொள்ள ரெவினியூ தலைமைப் பீடத்திலிருந்து ஓர் 'அட்வைசர்' வந்திருந்தார். விவாதத்தின்போது எப்படியோ அந்த அட்வைஸர் கொஞ்சம் ஆத்திரம் அடையும்படி, சேஷாத்திரி ஏதோ சொல்லிவிட்டார். அட்வைஸர் 'உமக்கு ஒரு வழி கண்டுபிடித்தாக வேண்டும்' என்று வெளிப்படையாகவே சீறியவர், உடனடியாக அந்த மாவட்டத்துக்குத் தேவையான உணவுப் பொருள் அளவுகளுக்கான ஜாபிதாவைக் கேட்டார். இதை எதிர்பார்த்திருந்த கலெக்டர் முன் எச்சரிக்கையாகத் தயாரித்து வைத்திருந்த 'ஸ்டேட்மெண்டை' வரவழைத்து நீட்டினார்.

அட்வைசர் அதைப் பார்த்தார். ''இது முழுக்க முழுக்கத் தப்பிதமாகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது. தேவைக்குமேல் நான்கு மடங்கு கேட்டிருக்கிறீர். நீர் ஒரு பேராசைக்காரர்!'' என்று வெகுண்டார்.

கலெக்டர் பதில் பேசவில்லை. அந்த ஸ்டேட்மெண்ட் தயாரிப்பதற்கு உதவிய புள்ளி விவரங்களையும், ரெவின்யூ போர்டு உத்தரவுகளையும் குறிப்புக்களையும் எடுத்து முன்னால் வைத்தார். அவைகளையும் அட்வைஸர் பார்த்தார்.

''ஓஹோ! அப்படியா! உமக்கு ரெவின்யூ போர்டை விட அதிக விஷயம் தெரிந்திருக்கிறது. உமது ஜில்லாவுக்கு ஒரு மணி தான்யம்கூட நான் கொடுக்கப் போவதில்லை'' என்று குமுறினார்.

கலெக்டர் கரம் கூப்பினார். ''எனக்குத் தனிப்பட்ட முறையில் நீர் என்ன தண்டனை வேண்டுமானாலும் [illegible] செய்யலாம்! ஆனால் என் நிர்வாகத்தின் கீழிருக்கும் பொது மக்கள் பட்டினி கிடப்பதை என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியாது. முதலில் அதற்கான வழியைப் பாரும்! பிறகு என்னைக் கவனிக்கலாம்'' என்றார் நிதானமாக.

திரு சேஷாத்திரி பி. ஏ. பரீட்சையில் இரட்டை முதல் வகுப்புகள் பெற்றுத் தேறியவர். ஆங்கிலமும் கணிதமும் அவருடைய ஆப்த நண்பர்கள். பி. ஏ. பட்டத்துடன் மாத்திரம் ஐ. ஸி. எஸ். படிக்கப் போய் வெற்றியடைந்த குறைந்த எண்ணிக்கையாளர்களில் அவர் ஒருவர். ஐ. ஸி. எஸ். பரீட்சையில் எல்லாவற்றையுமே புதுப் பாடங்களாக எடுத்துக் கொண்டார். ஆரம்பத்தில் சிரமமாக இருந்தாலும் சமாளித்துவிட்டார்.

அந்த நாளைய ஐ. ஸி. எஸ். அதிகாரிகளுக்கு ஆரம்பகாலப் பயிற்சி மிகவும் கடினமானது. அனுபவமும் சிரமமானது. நிர்வாகத்தின் கீழ் இருக்கும் கிராமங்களின் ஆடுமாடுகளை யெல்லாம் ஒவ்வொன்றாக எண்ணிக் கணக்குக் கூட்ட வேண்டியதுகூட அவர்கள் பொறுப்புத்தான்! நடந்தும் குதிரை மீதும் பல மைல்களைக் கடந்தாக வேண்டும். அவர்களே கூடாரங்கள் அமைத்துக் கிராமப்புறங்களிலிருக்க வேண்டும்.

''அந்த மாதிரிப் பயிற்சிகள், குறிப்பாகக் கிராமவாசிகளுடன் நிறையத் தொடர்பு கொள்ள வாய்ப்புக் கொடுத்தன. இப்போது அந்த முறை மாறிவிட்டது'' என்று குறிப்பிட்டார் திரு சேஷாத்திரி.

பாரதம் சுதந்திரம் அடைந்த வேளையில் திரு சேஷாத்திரி ஓய்வுபெற்றுக் கொண்டார். சிறந்த கலா ரசிகர் என்ற முறையில் அவர் கவனம் சில காலம் தமிழ்த்திரைப் படத் தொழில் நிர்வாகத் துறையில் திரும்பியது. தலைவர் என்ற ஹோதாவில் அவர் அந்த ஸ்தாபனத்துக்குப் பல நல்ல யோசனைகளைக் கூறியிருக்கிறார். பிறகு வழக்கறிஞர் துறை அவர் கவனத்தைக் கவரவே சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்கறிஞராகத் தம்மைப் பதிவு செய்து கொண்டு தொழில் நடத்துகிறார்.

''அந்த நாளைய நினைவுகள் இன்னும் என் உள்ளத்தில் பசுமையாக இருக்கின்றன. ஓய்வு பெற்ற பிறகும் என்னுடன் அன்று பழகியவர்களும் என் கீழ் வேலை செய்தவர்களும் மிகுந்த அன்புடன் நெருங்கிப் பழகுகிறார்கள். அதுவே எனக்கு மன நிறைவைக் கொடுக்கிறது'' என்று முடித்தார் திரு சேஷாத்திரி.

ஒரு திறமை மிக்க நிர்வாகி, மனிதப் பண்பைப் புரிந்து கொண்டவர், கலா ரசிகர், சிறந்த சம்பாஷணையாளர். அவரிடம் விடைபெற்றுக் கிளம்பி வெளியே வந்து பல நிமிடங்களாகியும் கணீரென்று தங்கு தடையின்றிக் கேட்ட அவருடைய பேச்சு செவிகளில் ஒலித்துக் கொண்டிருந்தது.

— கோமதி ஸ்வாமிநாதன்

## அத்தியாயம் அறுபது

# பழைய மணம்

நர்ஸ்களுக்குரிய வெண்ணிற உடுப்பு ஒன்றை அணிந்துகொண்டு வசந்தி 'ஜம்'மென்று நடந்து வந்து டாக்டர் ஜகந்நாதனின் தனியறைக்குள் நுழைந்து குறும்புத்தனமாக அவருக்கு ஒரு சல்யூட் அடித்துவிட்டுக் குதூகலத்துடன் குலுங்கி நின்றாள். இறுக்கமான நர்ஸ் உடையில் இளமையின் பூரிப்போடு வசந்தி தன் அழகெல்லாம் பிரகாசிக்க மிகவும் கவர்ச்சிகரமாக விளங்கினாள்.

அவளை ஜகந்நாதன் வைத்த கண் வாங்காமல் ஒரு நிமிஷம் வரை பார்த்துக்கொண்டே யிருந்தார். அவர் பார்வையில் ஒரு கிறக்கமும் ஒரு புதுக் கனையும் தொனித்தன. அவருடைய இயல்பையெல்லாம் தாண்டி, அவருடைய அறிவையெல்லாம் மீறி அவருடைய உள்ளமெல்லாம் அதிர்ந்தது.

அந்த ஆழ்ந்த பார்வையின் சக்திக்கு வசப்பட்டு வசந்தி தன் கன்னங்களில் நாணச் சிவப்பேற நிறைகுடம் போல் மனம் நிறைந்து நின்றாள். பெருமையால் அவளுடைய அங்கமெல்லாம் பூரித்துக் கண்களின் ஒளியில் வெற்றிக்கொடி நாட்டியது.

டாக்டர் ஜகந்நாதன் குறும்புத்தனமாகத் தம் கையில் நாடித் துடிப்பைத் தாமே ஒரு முறை பிடித்துப் பார்த்துவிட்டு வேகமாகத் தம் ஸ்டெதாஸ்கோப்பை எடுத்துத் தம் நெஞ்சிலே வைத்துத் தம் நெஞ்சுத் துடிப்பையும் பரீட்சித்துக் கொண்டார்.

''என்ன டாக்டர்! உங்களுக்கு ஹார்ட் — அட்டாக்கா (இருதயத் தாக்குதலா)?'' என்று வசந்தி சிரித்துக் கொண்டே கேட்டாள்.

''இல்லை, இப்போதுதான் எனக்கு ஹார்ட்டே (இருதயமே) உண்டாகிறது!'' என்று ஜகந்நாதன் சிரித்துவிட்டு, ''நீ இன்று நர்ஸ் உடையில் வந்திருக்கிறாயே, ஏதாவது மாறுவேடப் போட்டியா?'' என்று கேட்டார்.

''இல்லை டாக்டர்! இனி நான் நர்ஸாகவே சேவை செய்யப் போகிறேன்!''

''உன் படிப்பு?''

''அந்தக் கல்லூரிப் படிப்பு முடிந்துவிட்டது. இனிமேல் படிப்பு உங்களிடம்தான்!'' என்றாள் வசந்தி உணர்ச்சி பொங்க அவரைப் பார்த்துக்கொண்டே: அது 'நீங்கள்தான் இனிமேல் எனக்கு உலகம்' என்று தன் அளவற்ற காதலை உணர்த்துவது போலிருந்தது.

''வசந்தி! நீ கெட்டிக்காரி! டாக்டருக்கு வாழ்க்கைத்துணைவியாகப் போகிறவள் நர்ஸாகவும், அஸிஸ்டெண்டாகவும் அமர்ந்து விட்டால் எந்நேரமும் என்னோடு இருக்கலாமென்று கணக்குப் போட்டிருக்கிறாய்!''

''ஆமாம் டாக்டர்! உங்களுக்கு ஆபரேஷன் கருவியாகவும், வாட்டர்ஹீட்டராகவும், குக்கிங் மிஷினாகவும், இருதய டானிக்காகவும் உங்கள் கொள்கைகளுக்கு டெஸ்டராகவும், உங்கள் காதலுக்கு டெம்பரேச்சர் ரிக்கார்டராகவும் எல்லாம் நானே ஆகிவிடலாமல்லவா?'' என்றாள் வசந்தி ஆர்வத்தோடு.

ஜகந்நாதனும் அவளைப் போன்ற தாபத்தோடு அவளை ஒரு தடவை கூர்ந்து பார்த்தார்.

வசந்தியின் உதடுகளில் ஒரு புன்முறுவல் மின்னியது. அது அவளுடைய மொட்டு முகம் அவ்வளவையும் புது மெருகேற்றிப் பிரகாசிக்கச் செய்தது. அவளுடைய ஆத்மாவே அந்தப் புன்முறுவலில் பேசியது. அப்படியே அந்தப் புன்முறுவலை யெல்லாம் அள்ளி அள்ளிச் சுவைத்துக் கொண்டே யிருக்க வேண்டும் போலிருந்தது.

ஜகந்நாதன் பாய்ந்து வந்து வசந்தியின் கைகள் இரண்டையும் எடுத்துச் சேர்த்துத் தம் கைகளுக்குள் பிடித்துக் கொண்டு ஒரு கணம் மௌனமாக அவளுடைய மலர் முகத்தைக் கவிவோடு உற்றுப் பார்த்தார். பிறகு அடக்கவொண்ணா ஆர்வத் துடிப்போடு அவளை அழுத்திப் பிடித்துக் கொண்டு அப்படியே ஒரு கணம் மெய்மறந்து நின்றார். அவருடைய விரல் நுனிகள் வசந்தியின் கூந்தல் சுருள்களைச் சுழற்றி விளையாடிக் கொண்டே இருதயங்களின் இன்னிசைக்குச் சுருதி கூட்டிக் கொண்டிருந்தன.

''டாக்டர்....!'' என்று வசந்தியின் குரல் குழைந்து இறங்கியது. ஆசை

அரு.ராமநாதன்

யின் தவிப்பெல்லாம் மடை திறந்த வெள்ளமாக வெளிப்பட முயல்வது போல் அவளுடைய இளம் உதடுகளும் ஜகந்நாதனின் வாய் இதழ்களை நோக்கித் துடித்தன.

ஜகந்நாதன் ஒரு பெருமூச்சு விட்டார். வாழ்க்கையிலேயே அவர் மனப்பூர்வமாக முதன் முதலில் விடும் பெருமூச்சு அதுதான்!

"வசந்தி! நாம் இருவரும் மனப்பூர்வமாகக் காதலிக்கிறோம்! நம்மையும் விட வலிமையாகிவிட்ட காதலை இனிமேல் நாம் மறைக்கவோ, அதை எதிர்த்துப் போராடவோ வேண்டியதில்லை. சம்பிரதாயத் தளைகளையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு, உலக நியதிகளையெல்லாம் தாண்டி நின்று, நாம் அந்தக் காதலின் பிணைப்பிலே ஒன்றாகி விடுவோம்! அந்த அளவுக்குத் தைரியமாக நின்று என்னைக் காதலிப்



பாயா?'' என்று ஜகந்நாதன் ஆர்வத்தோடு கேட்டார்.

''நீங்கள்தான் எனக்கு எல்லாம் டாக்டர்! அதற்காக நான் எதுவும் செய்வேன்! எதுவும் செய்வேன்!'' என்று வசந்தி உணர்ச்சிப் பெருக்கோடு ஜகந்நாதனின் நெஞ்சுக்குள் முனகினாள். ஆழ்ந்த ஆனந்தத்தின் தீவிரம் அவளது உடலெங்கும் பொங்கிப் பரவியது. தான் காதலிப்பது போலவே தன்னை ஜகந்நாதனும் ஆத்மார்த்தமாகக் காதலிக்கிறார் என்பது அவளுக்குத் தெரியும். அந்தக் காதலுக்காகச் சம்பிரதாயத் தளைகளையெல்லாம் தூக்கியெறிந்து விட்டு ஜகந்நாதன் கூப்பிடும் உலகத்தின் எந்த மூலைக்கும் வாழ்க்கையின் எந்த எல்லைக்கும் அவரைப் பின்தொடர்ந்து போக வசந்தி தயாராகவேயிருந்தாள். பக்தித் துறையில் சரணாகதித் தத்துவத்தைப் போல் இந்தக் காதல் முறையில் ஜகந்நாதனே தனக்குச் சகலமும் என்று நம்பி, தன் இருதயம், தன் வாழ்க்கை, தன் எதிர்காலம், தன் கனவுகள், தன் நினைப்புகள் அனைத்தையும் ஜகந்நாதன் கையிலேயே அர்ப்பணித்து அந்தக் காதலில் தன்னையே இழந்து விடவும் முன்வந்து விட்டாள்.

''வசந்தி! இந்த உலகத்தில் காதலைத் தவிர வேறு எதுவுமில்லை. அதற்காக வாழ்வதைத் தவிர வேறு ருசியான வாழ்க்கையும் எதுவுமில்லை!'' என்று ஜகந்நாதன் சொன்னார்.

அவ்வார்த்தைகள் வாழ்க்கையின் இனிப்புகளையெல்லாம் ஒருங்கே குவிப்பது போல் இனித்தன.

வசந்தியின் கண்களை ஜகந்நாதன் ஊடுருவிப் பார்க்க முயன்றார். ஆனால் வசந்தி தன் சின்னஞ் சிறு முகத்தை ஜகந்நாதனின் விசாலமான மார்பில் புதைத்துக் கொண்டு கண்ணிமைகளை மூடி ஒருவிதப் பரவச நிலையில் மெய் மறந்து நின்றாள்.

ஒரு நிமிஷம் அப்படியே அசைவற்ற மௌனமாக நின்ற பிறகு வசந்தியின் முகத்தை ஜகந்நாதன் தன் இரு கைகளாலும் தூக்கி அமுதக் கோப்பையைப் போல் ஏந்திப் பிடித்துக் கொண்டு, ''வசந்தி!'' என்று பரிவோடு கூப்பிட்டார்.

வசந்தி மெல்லக் கண்களைத் திறந்து பார்த்தாள். அவளது விழியோரங்களில் நீர் துளித்து நின்றது.

''வசந்தி! நம் காதலுக்கு உன்னை முற்றிலும் தத்தம் செய்து விடுவதற்கு முன்னால் என்னைப் பற்றி நீ பூரணமாகத் தெரிந்துகொள்ள வேண்டும்!''

''எனக்கு எதுவுமே தெரிய வேண்டாம் டாக்டர்! உங்கள் மனம் உங்களை விட எனக்கு நன்றாகத் தெரியும்; அதுவே எனக்குப் போதும்!'' என்றாள் வசந்தி ஒருவிதப் பெருமிதப் புன்முறுவலோடு.

''நம்முடைய கல்யாணத்தைப் பற்றிப் பிரச்னை எழுந்தால்...''

''ஒரு பெரிய தடை இருக்கிறது என்பது எனக்குத் தெரியும் டாக்டர்! கல்யாண பந்தமே கூடாது, கட்டுப்பாடற்ற சுதந்திரக் காதல்தான் வேண்டும் என்பது போன்ற விசித்திரமான கொள்கைகளை இன்னும் ஏன் நீங்கள் விடாப்பிடியாக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்பதும் எனக்குப் புரிந்து விட்டது, டாக்டர்! அதாவது உங்கள் பழைய வாழ்க்கையில் ஏற்கெனவே ஒரு காதலி இருந்திருக்கிறாள்; அவள் பெயர் மல்லிகா! அவள் நல்ல சதைப் பிடிப்புடன் குண்டாக இருப்பாளாகையால் அவளுக்குக் குண்டு மல்லிகை என்று புனைபெயர் கூடச் சூட்டினீர்கள்....'' என்று வசந்தி சிரிக்க முயன்றாள்.

ஜகந்நாதன் புன்முறுவலுடன், ''ம், வசந்தி! அந்த மல்லிகாவைப் பற்றி உன் அக்கா உமாவிடம் நான் நிறையச் சொல்லியிருக்கிறேன். அதையெல்லாம் என்றாவது ஒரு நாள் உன் அக்கா உன்னிடம் சொல்லுவாள் என்று நினைத்துத்தான் நான் அப்படி அவளிடம் சொல்லி வைத்தேன்!'' என்றார்.

''உங்கள் அந்தப் பழைய வாழ்க்கையில் அந்தக் குண்டுமல்லிகையிடம் நீங்கள் ஏதோ ஒரு வகையில் பந்தப்பட்டிருக்கிறீர்கள். அது கல்யாண பந்தமாகத்தான் இருக்கும்! இல்லையா, டாக்டர்?''

''ஆமாம்! என்னை எப்படியோ மல்லிகா ஒரு கல்யாண பந்தத்தில் மாட்டி வைத்துவிட்டாள். குழந்தைத்தனமான அவளுடைய திருப்திக்காகவே ஏதோ விளையாட்டாக நான் அந்த முட்டாள்தனமான காரியத்தைச் செய்துவிட்டேன். அந்தப் பழைய பந்தத்திலிருந்து நான் இன்னும் விடுபடவில்லை. ஒருவேளை இனிமேல் அந்தப் பழைய பந்தத்திலிருந்து விடுபட முடிந்தால் நான் உன்னோடு புதிய பந்தத்துக்குத் தயாராகி மறுபடியும் கல்யாண விலங்குகளைச் சுமக்கிறேன். உனக்காக என்னுடைய ஆணித்தரமான கொள்கைகளைக்கூடக் காற்றில் பறக்க விட்டு விடுகிறேன்!'' என்று ஜகந்நாதன் கூறிவிட்டுச் சிரித்தார்.

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



கேசம் உதிருதல்

உங்கள் ரோமம் உதிருகிறது. ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இக்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-2, சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

# Silvikrin

சில்விக்ரீன்—கேச ஆரோக்கியத்துக்கான வழி




**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீர்படி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.




SP/1/P/7/64

# ஈறு உபாதை மற்றும் பற்சிதைவு இவைகளுக்கான சிகிச்சையில்

# போர்ஹான்ஸ்

டூத்பேஸ்ட் உபயோகித்துப் பெற்ற

## வியக்கதக்க பலன்கள்

ஒரு பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்

இக் கற்சாட்சிக் கடிதங்களை ஜ்யோப்ரே மானேர்ஸ் & கோ. லிட்., கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.



என்னுடைய ஈறுகள் பஞ்சுபோல ஆகி விருந்ததால் 1948ல் அவைகளிலிருந்து இரத்தம் கசியத்தொடங்கியது. என் பற்களைப்பற்றிப் பெருமைப்படும் என் கணவர் என்னை போர்ஹான்ஸ் டூத் பேஸ்ட் உபயோகிக்கச் சொன்னார். அதன்பிறகு நான் போர்ஹான்ஸைத் தவறாமல் உபயோகித்து அதன்மூலம் விசேஷமான பலன்களையும் அடைந்துள்ளேன்.

ஜெச். கே. பிலாய்நகர்



மூன்று வருடங்களுக்கு முன்பு நான் பல்வலியினால் வேதனைப்பட்டேன். என் நண்பன் ஒருவன் போர்ஹான்ஸ் உபயோகிக்கும்படி ஆலோசனை கூறினான். அதை நான் உபயோகிக்கத் தொடங்கினேன். ஒரு மாதம் கழிந்தவுடன் என் பல்வலி குணமானதுடன் என் பற்கள் ஒளிவீசும் வெண்மையுடனிருப்பதைக் கண்டு வியந்தேன். நான் இப்போது போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை உபயோகித்து வருகிறேன்.

பி. பி. பம்பாய்



நான் இளமைப் பிராயத்திலிருந்தே போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை உபயோகித்து வருகிறேன். என் குடும்பத்தில் எல்லோரும் இந்த டூத்பேஸ்டை உபயோகிக்கிறார்கள். ஏனெனில் இது பற்களை ஒளிவீசும் வெண்மையுடனும் ஈறுகளை ஆரோக்கியத்துடனும் இருக்க உதவுகிறதென்பதைக் காண்கிறோம் என்பதை உங்களுக்கு தெரிவிக்க விரும்புகிறோம்.

(ஸ்ரீமதி) கே. வி. பங்களூர்

**இலவசம் — பற்கள் பராமரிப்பு பற்றி படங்கள் கொண்ட புத்தகம்**

ஈறு உபாதைகள் மற்றும் பற்சிதைவிலிருந்து உங்களைப் பாதுகாத்துக் கொள்வது பற்றி மேலும் அறிய நீங்கள் விரும்பினால், இன்றே கீழ்க்கண்ட விலாசத்திற்கு "CARE OF THE TEETH & GUMS" என்ற புத்தகத்தின் (ஆங்கிலத்தில்) பிரதியைப்பெற தபால் செலவுக்கென 15 ந. பை ஸ்டாம்புகளை அனுப்பவும் :- டிபார்ட்மென்ட்: கே-6, மானேர்ஸ் டென்டல் அட்வைஸரி ப்யூரோ, தபால் பை நெ. 10031, பம்பாய்-1




...இதற்கு உகந்த, சிறந்த சேர்க்கைக்கு.

## போர்ஹான்ஸ் டபிள் ஆக்ஷன் டூத் பிரஷ் உபயோகியுங்கள்



இந்த டூத்பிரஷ் மட்டுமே

★ உங்கள் பற்களைச் சுத்தம் செய்வதோடு.

★ ஈறுகளையும் இதமாகத் தடவிக் கொடுக்கிறது.

B.27-TAM

வசந்தியின் முகத்தில் ஒரு புதிய பிரகாசம் தோன்றியது. அதை ஜகந்நாதன் கூர்ந்து கவனித்துக்கொண்டே, ''வசந்தி! உனக்கு அந்த மல்லிகாவைப் பற்றி முழு விவரமும் தெரியுமா?'' என்று கேட்டார்.

''ஓரளவு போதுமான வரையில் தெரியும்! உங்கள் குண்டுமல்லிகை அந்தக் காலத்தில் உங்களை உயிருக்குயிராய்க் காதலித்தாள். எப்போதும் அவள் அருகிலேயே நீங்கள் இருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டாள்! எந்த நேரமும் எந்த நிமிஷமும் உங்கள் பார்வை, பேச்சு, நினைப்பு எல்லாம் அவளைப் பற்றியதாகவே இருக்க வேண்டுமென்று தவிதவித்தாள்! நீங்களே அவளுக்கு ஒரே தனி உலகம் என்று பரிபூரணமாக நினைத்தாள். ஆனால் அதுபோல் அவள்தான் உங்களுக்கு ஒரே தனி உலகம் என்று உங்களால் நினைக்க முடியவில்லை. நீங்கள் ஒரு டாக்டர்! உங்களுக்கு ஒவ்வொரு நோயாளியும் ஒவ்வோர் உலகமாக இருந்தார்கள். அதோடு தொழில், வருமானம், புகழ், ஆராய்ச்சிகள், ஆத்ம விசாரணை, கலை, நாவல் என்று உங்களுக்குப் பல உலகங்களும் இருந்தன. அந்த உலகங்களையெல்லாம் மல்லிகாவால் எட்டிப் பிடித்து உங்களுக்கு ஈடாக நின்று சுவாரசியப் படுத்தவோ, அல்லது பொறுத்துக்கொள்ளவோ முடியவில்லை. பெண் நோயாளிகளோடு நீங்கள் பழகுவதை மட்டுமல்ல, ஆண் நோயாளி சிநேகிதர்கள், குழந்தைகள், பூனைகள், பூக்கள், ஆராய்ச்சிகள், கதை எழுதுதல், பொழுதுபோக்குகள் முதலானவற்றில் நீங்கள் சிறிது கவனம் செலுத்துவதைக் கூட அவளால் சகித்துக் கொள்ள முடியவில்லை. அவளுடைய அத்தகைய பொறுமைக் குணம் அன்புத் தொல்லையும் உங்களுடைய எதிர்காலத்தைத் துடைத்து, உங்களுடைய தனித்தன்மையை அழித்து விடுமோ என்றும் பயந்தீர்கள்! அதை மல்லிகாவும் உணர்ந்தாள். அதனால் அவள் உங்களுக்காக, உங்களுடைய எதிர்கால நன்மைக்காக, உங்களுடைய வாழ்க்கையை விட்டே போய் விட்டாள்! இல்லையா, டாக்டர்?''

''ஆமாம்! ஆனால் விவாக பந்தத்திலிருந்து எனக்கு விடுதலை அளிக்காமலே அவள் போய் விட்டாள்! கடைசியாக அவள் என்னைப் பிரிந்து செல்லும்போது மூன்றே வாக்கியங்கள் தான் சொன்னாள். — 'உங்களுக்காகவே போகிறேன். அவ்வளவு தூரம் உங்களை நான் காதலிக்கிறேன்! அதை நீங்கள்

## குட்டிக் கதை

சில ஆண்டுகளுக்கு முன் நடந்த சம்பவம்: ராஷ்டிரபதி பவனத்தில் ஒரு விருந்துக்கு ஏற்பாடாகி இருந்தது. ஜவாஹர்லால் நேருவுக்கு அருகில் டாக்டர் சம்பூர்ணானந்தர் உட்கார்ந்திருந்தார். எதிரிலும் பக்கத்திலும் டாக்டர் ராஜேந்திரப் பிரசாத், புருஷோத்தம் தாஸ் டாண்டன், கோவிந்த வல்லப பந்த் முதலியவர்கள் அமர்ந்திருந்தார்கள்.

விருந்து முடிந்ததும் சிகரெட் டப்பாவை நீட்டினார் பணியாளர். சம்பூர்ணானந்தருக்குச் சிகரெட் குடிக்கப் பிடிக்கும் என்பது நேருஜிக்குத் தெரியும். ஆனால் பக்கத்தில் இருந்த பெரியார்களுக்கு எதிரே சம்பூர்ணானந்தர் சிகரெட் குடிக்க மாட்டார் என்பதும் நேருஜிக்குத் தெரியும்.

பணியாளர் நீட்டிய சிகரெட் டப்பாவிலிருந்து நேரு இரண்டு சிகரெட்டுகளை எடுத்துக்கொண்டார். ஒன்றைச் சம்பூர்ணானந்தரின் சட்டைப் பையில் போட்டு ''நீ இங்கே இவர்களுக்கெதிரில் சிகரெட் குடிக்க மாட்டாய் என்பது எனக்குத் தெரியும். வீட்டில் போயாவது குடி. உனக்காகத்தான் ஒரு சிகரெட்டை நான் திருடினேன்!'' என்றார். இதைக் காதோடு காது வைத்தாற்போல் சொல்லியிருந்தாலாவது பரவாயில்லை. உரக்கப் பக்கத்தில் இருந்தவர்களுக்கெல்லாம் கேட்கும்படியாகச் சொன்னார். கொல்லென்று அவர்கள் நகைக்க, சம்பூர்ணானந்தரும் தலை குனிந்து அந்தச் சிரிப்பில் கலந்துகொள்ளும் படியாகிவிட்டது.

---

என்றாவது ஒரு நாள் உணர்ந்து எனக்காக ஒரு சொட்டுக் கண்ணீர் வடிப்பீர்களா?' — இந்த மூன்று வாக்கியங்களைக் கடைசியாக ஒரு கேள்விக் குறியோடும், கண்ணீரோடும் கொட்டிவிட்டு உணர்ச்சிப் புயல் போல் சடசடவென்று வேகமாக வெளியே ஓடிவிட்டாள். அப்படியே அவளுக்குப் பைத்தியம் பிடித்து விடுமோ என்று கூட நான் நினைத்தேன்!''

''பாவம்! மல்லிகாவுக்குத்தான் உங்கள் மீது எவ்வளவு காதல்?'' என்று வசந்தி சொன்னபோது அவள் கண்களில் கண்ணீர் கசிந்து உருகியது.

ஜகந்நாதனோ புன்முறுவலோடு, ''வசந்தி! பொதுவாகக் குழந்தைத்தனமான காதலில் பொறுமை புறப்படும்போது அது ஆளை விழுங்கும் பூதமாக மாறி விடுகிறது'' என்று கூறிவிட்டு வசந்தியின் கருவிழிகள் வழியாக அவளுடைய ஆத்மாவையெல்லாம் ஊடுருவி நோக்கிய வண்ணம், ''உன்னைப் பொறுத்தவரையில் நீ எப்போதும் என் எண்ணங்களை எதிரொலிப்பாயே தவிர, ஒருபோதும் பொறுமைப்பட மாட்டாய். அது

எனக்குத் தெரியும்!'' என்றார். அவருடைய அந்த வாசகம் வசந்தியின் பரிதாபக் கண்ணீரைப் பரவசச் சிரிப்பாக மாற்ற முயன்றது.

ஒரு நிமிஷம் வசந்தி மௌனமாக இருந்து விட்டு, ''உங்களைப் பிரிந்து மல்லிகாவால் எப்படி வாழ முடியும்? அவளுடைய தனி வாழ்க்கைக்குத் தேவையான வசதிகளை யெல்லாம் நீங்கள் ஏற்பாடு செய்து கொடுத்திருப்பீர்களே?'' என்று கேட்டாள்.

''அவளுடைய வாழ்நாள் முழுதும் செலவழிப்பதற்குத் தேவையான மூலதனத்தை அவள் பெயரால் ஒரு பாங்கில் போட்டிருந்தேன். அதையெல்லாம் அவள் அந்தப் பாங்கிலிருந்து எடுத்து ஒரு டிராப்டாக மாற்றிக் கொண்டு தன் பாட்டியோடு சிங்கப்பூரிலிருந்து புறப்பட்டு இந்தியாவுக்குப் போய் விட்டாளென்று தெரிந்தது. ஏனெனில் என் எதிர்காலத்தின் பிரகாசமான பகுதி தாயகமான இந்தியாவில்தான் விளம்பரமாகும் என்று அவள் நினைத்திருப்பாள்!''

''அதன் பிறகு அவளைப் பற்றி ஏதாவது செய்தி கிடைத்ததா?''

''இல்லை. ஆனால் இப்போது மல்லிகாவின் பாட்டி காலமாகி யிருப்பாள்!''

''இப்போது மல்லிகா எங்கே இருப்பாள் என்று கண்டுபிடிக்க முடியாதா?''

''அவள் இன்னும் உயிரோடு இருக்கிறாளா இல்லையா என்று ஆதார பூர்வமாக எந்தச் செய்தியும் கிடைக்கவில்லை. ஆனால் அவள் எங்கேயாவது இன்னும் உயிரோடுதான் இருப்பாள்! ஏனென்றால், என் கைகளுக்குள்தான் தன் கடைசி மூச்சை விட வேண்டும் என்ற பிரார்த்தனையுடன் போனாள். அப்படியே என்றாவது ஒரு நாள் அவள் என் கைகளுக்குள் வந்தும் விடுவாள்!''

வசந்தி தன் நெஞ்சுக்குள் ஒரு பெரிய விம்மலை அடக்க முயல்வது அவளுடைய கருவிழிகளின் நிறைவில் பிரதிபலித்தது.

அவளை ஜகந்நாதன் குறுகுறுவெனப் பார்த்துக் கொண்டே, ''வசந்தி! கணவனும் மனைவியும் இத்தனை வருஷங்கள் பிரிந்திருந்தால் விவாக ரத்தாகும் என்று சட்டம் ஒரு காலவரம்பை நிர்ணயித்திருக்கிறது. என் விஷயத்தில் சட்டபூர்வமான அந்தக் காலவரம்பு முடிவதற்கு இன்னும் ஒரு மாதம் இருக்கிறது. அதற்குள் மல்லிகா மறுபடியும் தோன்றி என் கைகளுக்குள் வந்து சேர்ந்து விட்டால் என்ன ஆகும்? அதை யோசித்துப் பார்!'' என்றார்.

வசந்தி ஒன்றும் பதில் சொல்லவில்லை.

''வசந்தி! என்மீது உனக்குள்ள காதலையெல்லாம் உன் அக்காவிடம் மனம் திறந்து பேசியிருக்கிறாய். அதனால் தான் என் பழைய காதலியைப் பற்றிய புராணத்தை உமா உன்னிடம் சொல்லியிருக்கிறாள். இவ்வளவையும் சொன்னவள் என்னைக் காதலிப்பதில் உள்ள ஆபத்தையும் நிலையற்ற தன்மையையும் உனக்கு விளக்கிச் சொல்லியிருப்பாளே?'' என்று கேட்டார்.

வசந்திக்கு உணர்ச்சி வசமாகிக் கண்கள் பொங்கின. குரலும் குமுறியது. ''என் அக்காவோ என் அப்பாவோ யாரும் சொல்வதை இனி நான் கேட்கப் போவதே யில்லை! நீங்கள்தான் எனக்கு எல்லாம் என்று வந்து விட்டேன். இனி அந்த எண்ணத்தை எதை முன்னிட்டும் என்னால் மாற்றிக் கொள்ளவே முடியாது!''

''அப்படியானால் உன் வாழ்க்கை?''

''உங்களுக்குச் சட்டபூர்வமான வாழ்க்கைத் துணைவியாக முடியுமோ முடியாதோ உங்கள் அருகில் நான் நர்ஸாகப் பணிவிடை செய்து உங்கள் முகத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கவாவது முடியுமல்லவா?''

''நீ என் வாழ்க்கைத் துணைவி ஆவதற்கு ஒரே பெரிய தடையாக இருப்பது அந்த மல்லிகாதான்! அந்தத் தடை தானாகவே எளிதில் நீங்கிவிடுமா என்பது இன்னும் ஒரு மாதத்துக்குள் தெரிந்துவிடும்! அதுவரையில் நீ என் அருகிலேயே நர்ஸாகச் சஞ்சரித்து என் இதயத்திற்கு ஜீவன் ஊட்டிக் கொண்டிருக்கலாம்.''

வசந்தி தன்னையும் மீறிய நிலையில் ஏனோ விம்மி விம்மி அழுதாள்:

''வசந்தி! நோயாளிகளின் கண்களிலும் நான் சிரிப்பைத்தான் காண விரும்புவேனே தவிர, கண்ணீரைக் காண விரும்புவதேயில்லை!'' என்றார் ஜகந்நாதன்.

''இது என் ஆனந்தக் கண்ணீர்!'' என்று வசந்தி சிரிக்க முயன்றாள்.

''அது என்ன கண்ணீராக இருந்தாலும் டாக்டரின் அறையிலிருந்து ஒரு நர்ஸ் கண்ணீருடன் ஓடுவதை மற்றவர்கள் பார்த்தால் நான்தான் அந்த இளம் நர்ஸுக்கு இருதய வியாதியை உண்டாக்கி விட்டேன் என்று நினைப்பார்கள்!'' என்றார் ஜகந்நாதன்.

வசந்தியும் அவரோடு சேர்ந்து சிரித்தாள். அந்தச் சிரிப்பின் அடிப்படையை ஆத்மாவால்தான் உணர முடியுமே தவிர அதன் அர்த்தத்தைப் பகுத்தறிவினால் எடை போட முடியாது! (தொடரும்)

# முள்ளுக்கு முள்!

சுகி சுப்பிரமணியன்

பாத்திரங்கள் :

சுந்தரம் — வேலை தேடும் வாலிபன்
எழுத்தாளர் — 'சதி'
மீனு — ஸ்ரீமதி சதி
எஸ். எஸ்.
—எஸ். ஷையா — வக்கீல்
பார்வதி — ஸ்ரீமதி ஷையா
த. தாவன்னு — கடைக்கார முதலாளி
தரகன் சம்முவம்

காட்சி — 1

[எழுத்தாளர் 'சதி' வீடு. சுந்தரம் தயங்கித் தயங்கி உள்ளே நுழைகிறான். டைப்ரைட்டரில் எதையோ அடித்துக் கொண்டிருக்கிறார் ச. திரவியம் என்ற இயற்பெயர் உடையவர்.]



சுந்தரம்: அண்ணா, இருக்கிறீர்களா?

மீனு (எட்டிப் பார்த்து): உங்க "தம்பி" கூப்பிடுறார்.

சுந்தரம் (உள்ளே வந்துகொண்டே): அண்ணா வேலையாக இருக்கிறீங்க போலத் தெரியுது.

சதி: ஓகோ! நீயா? டைப்பிங் பாஸ் செய்தாச்சா ?

சுந்: அதுதான் அறுபத்துமூன்றிலேயே பாஸ் செய்திட்டேனே....

சதி: ஷார்ட் ஹாண்டுதான் பாஸ் செய்யச் சொன்னேனே ?

சுந்: பாஸ் செய்திட்டேன். ஹையர்!

சதி: தமிழ் என்ன ஆச்சு ?

சுந்: 1960லே தமிழ் டைப்பிங், 1961லே ஷார்ட்டுஹாண்டு தமிழ் ஹையர். 62லே ஆங்கிலம் ஹயர். 63லே ஷார்ட்டு ஹாண்டு ஹயர்....

சதி: ஆமாம். மறந்து போச்சு சுந்தரம்.

மீனு: தம்பியும் ஆண்டுக்கு ஒருமுறை வந்து வேலை கேட்குது உங்களிடம்.

சுந் (தயக்கத்துடன்): எப்படியாவது ஒரு வேலை பார்த்துச் சிபாரிசு செய்யணும் நீங்க.

சதி: சிரமத்தைப் பாராமல் ஹிந்தியும் ஹயர் பாஸ் செய்திடு.

சுந்: செய்கிறேன் அண்ணா.... எப்படியோ உங்க தயவிலேதான் வேலை கிடைக்கணும். மறந்திடாதீங்க. உங்க ஆபீஸிலே ஏதாவது...

சதி: ஆபீஸிலே என்ன? ஏதோ வேலை வேணும். நீ ஹிந்தி டைப்பிங், ஷார்ட்டு ஹாண்டு பாஸ் பண்ணி வை....

சுந்: பாஸ் செய்திட்டு உங்களைப் பார்க்க வர்றேன். இதுதான் என் முகவரி. திடும்னு வேலை கிடைச்சால் எழுதுங்க எனக்கு.

['வணக்கம்' எனக் கூறி விட்டு நழுவுகிறான் சுந்தரம்.]

சதி: சுந்தரம் போய்ச் சேர்ந்தானா ?

மீனு: ரொம்ப ஒழுங்குதான்! 1959ம் வருஷம் முதல் அவனும் உங்களைத் தேடி ஆண்டுக்கு மூணு முறை வருகிறான். தமிழ் லோயர், தமிழ் ஹயர், ஆங்கிலம் லோயர், ஆங்கிலம் ஹயர் என்று அவனை அலைக்கழிக்கிறீங்க. பாவமா இருக்குது. உண்மையைச் சொல்லுங்க...

சதி: அவன் அறிவையும் யோக்கியதாம்சத்தையும் வளர்க்கிறேனாக்கும்.

மீனு: நீங்கள் இன்ஸ்டால்மெண்டு பி. ஏ. தானே! அந்தப் புத்திதான் இருக்கும் உங்க சிபாரிசுக்கும்.

சதி: இன்ஸ்டால்மெண்டு பி.ஏ.ன்னு கிடையாது மீனு !

மீனு: ஒரே முறையிலேயா பி. ஏ. பாஸ் செய்தீங்க ? பார்ட் பார்ட்டா இன்ஸால்மெண்டு முறையிலேதானே பி. ஏ. பட்டத்தை வாங்கினீங்க? ஏழு வருஷங்கள் பிடிச்சது உங்களுக்கு பி. ஏ. பட்டம் வாங்க.

சதி: நான் இன்ஸால்மெண்டு பி. ஏ. தான். அதுக்காகச் சுந்தரம் என்னை நெருங்கி வரலே. நான் பெயர் பெற்ற எழுத்தாளன். அவன் எனது வாசகன்.

மீனு: அந்த ஒரு காரணத்துக்காகவாவது நீங்கள் நேர்மையாக நடக்கணும்.

சதி: என்ன சொல்லணும்கிறே?

மீனு: சுந்தரத்திடம், 'அப்பா! நான் கையாலாகாத குமாஸ்தா. உபதொழில் எனக்கு எழுத்து. உபரித் தொழில் பலசரக்குக் கடை டைப்பிஸ்டு. சிபாரிசுக்கு என்னால் முடியாது. வேறு நபரை நாடுவது நலம்' என்று சொல்லுங்கள்.

சதி: தள்ளி விடும் தத்துவம் எனக்குத் தெரியாது. உலகம் எங்கும் இப்படித்தான்

இருக்குது. தன்னை மதிப்பவனைத் தொடர்ந்து மதிக்கும்படி செய்து கொண்டிருக்கணும்.

மீனா: அடுத்த தடவை அவன் வரட்டும். உங்கள் அந்தரங்கத்தை உடைத்து விடுகிறேன். பதினாறு பாஷையிலேயும் அவனை ஷார்ட்டுஹாண்டும் டைப்பிங்கும் பாஸ் செய்யச் சொன்னால் இருபத்தெட்டு வருஷங்கள் அவன் வயசிலே ஓடியே போயிடும்!

[மளிகைக் கடை செட்டியார் த. நாவன்னா உள்ளே நுழைகிறார்.]

த. நாவன்னா: என்னுங்க நம்ம டைப் வேலை முடிஞ்சுதா, மிஸ்டர் சதி?

சதி (சிரித்து) இன்னும் ரெண்டே பக்கம் பாக்கியிருக்குது. ஆபீஸ் போகிற வழியிலே நானே கொண்டு வர்றேன்.

தனா: டைப் அடிச்ச வரையில் பார்க்கலாமா? கொடுங்க.

[எதிரே உள்ள நாற்காலியில் அமர்ந்து பார்க்கிறார்]

சதி: பாருங்க. காப்பி ஏதாச்சும்....

தனா: நானு காப்பி கேட்டிருந்தேனே.

சதி: டைப் காப்பியை எடுத்திட்டேன். குடிக்கிற காப்பி.....

(சிரிக்கிறார்)

தனா: ஓ! அந்தக் காப்பி என்னாத்துக்கு? வேண்டாமுங்கறேன். ரெண்டு பக்கத்தையும் அடிச்சுக் கொண்டு வாங்க.

மீனா (மெதுவாக): இவங்களிடம்தான் அந்தப் பையனுக்குச் சிபாரிசு செய்யுங்களேன்!

தனா: மீனும்மா என்ன சொல்லுறாங்க ?

சதி: உங்களிடம் ஏற்கனவே சுந்தரம் என்ற பையனைப் பற்றிச் சொன்னேனே.

தனா: நீங்களும் நாலஞ்சு வருசமா சொல்லி வர்றீங்க !

சதி: நான் இனிமேல் உங்களுக்கு டைப் அடிக்கிறது முடியாது.

தனா: பெரிய நாவல் போட்டிக்கு எழுதப் போறீங்களா? (சிரிப்பு)

சதி: ஆபீஸ் வேலை அதிகம். பையனை உங்களிடம் வேலைக்கு வைச்சுக் கொள்ளுங்கள். டைப்பிஸ்ட் வேலையும் கணக்கு வேலையும் பார்த்துக் கொள்வான்.

தனா: அடுத்த மாசம் வரச் சொல்லுங்க. பையன் படிப்பு, டைப்பு எப்படி?

சதி: நல்ல டைப்பு அவன்! படிப்பும் படிச்சவன். இங்கிலீஷ் தமிழ் ஷார்ட்டுஹாண்ட் மூன்றிலும் ஹயர் பாஸ் செய்திருக்கிறான்.......

தனா: அடுத்த மாசம் அவன் வரட்டும். நம்ம கடைக்கு ஆள் தேவைதான். நான் போகிறேன்.

[டைப் அடித்த காகிதங்களைக் கவருக்குள் வைத்தபடி நடக்கிறார்]

சதி: பாக்கியை ஒரு மணி நேரத்திலே கொண்டு வர்றேன்.

மீனா: அப்பாடா! உங்கள் வாசகன் சுந்தரம் அடுத்த மாசம் வேலைக்கு வந்திடுவான் ! தைரியமாக நான் சொன்னதாலே அவனுக்கு வேலை கிடைச்சது.

சதி: அஞ்சு வருஷமா பேசி முடிச்ச வெற்றி வாங்கியிருக்கேன். நீ பெருமையடிக்கிறியே.

மீனா: உங்கள் பெருமையாகவே இருக்கட்டும். தப்பு இல்லாம அடியுங்க...

(டைப் அடிக்கிறார் சதி.)



## காட்சி – 2

[ஒரு மாதத்துக்குப் பின் த. நாவன்னா செட்டியார் என்ற பலகையைப் பார்த்தபடியே உள்ளே நுழைகிறான் இளைஞன் சுந்தரம்.]

சுந்தரம்: முதலாளி ஐயா.

தனா: வா, உள்ளே. நீதானே எழுத்தாளர் சதியின் ஆள்.

சுந்தரம்: ஆர். சுந்தரமுன்னு பேரு.

தனா: யார் சுந்தரமென்ன? என் சுந்தரமா வந்திட்டே! உனக்கு டைப்பிங்....?

சுந்தரம்: ஹயர். இங்கிலீஷ் தமிழ் இரண்டிலும் ஹயர்.

தனா: ஷார்ட்டு ஹாண்டு?

சுந்: ஹயர். இங்கிலீஷ் தமிழ் இரண்டிலும் ஹயர்.

தனா: ஹிந்தி.

சுந்: அதுவும் டைப் அடிக்கிறேன்.

தனா: ம்... இவ்வளவு சர்டிபிகேட் வைச்சுக்கிட்டு ஏன் பலசரக்குக் கடைக்கு வர்றே ?

சுந்: எழுத்தாளர் சதி சொன்னபடி ஒவ்வொன்றையும் பாஸ் செய்றதிலே வயசு ஆகிப் போச்சு.... அப்பாலே எனக்கு ஒரு காதலி இருக்குது.

தனா (இளஞ் சிரிப்பு): அதனாலே என்ன?

சுந்: வெளியூர் உத்தியோகத்துக்குப் போனால் அந்தப் பெண்ணுக்குக் கலியாணம் ஆகிப் போகும். அதனாலே உள்ளூரிலே இருந்து எனக்காக முயற்சி செய்யறேன்.

தனா: அதாவது சம்பாத்தியத்தைவிட உனக்குக் காதல் பெரிது.

சுந்தரம் (அசடு வழிய): ஆமாங்க....

தனா: உன் காதல் விவகாரம் எழுத்தாளர் சதிக்குத் தெரியுமா?

சுந்: தெரியாது. அவரிடம் நீங்க சொல்லவும் வேண்டாம் முதலாளி.

தனா: உனக்கு நான் தரப் போகிற வேலை டெம்பரவரிதான்.... (சதி வருகிறார்)

சுந்: போதும்....வாங்க அண்ணா வணக்கம்.

சதி: வணக்கம். செட்டியார்வாள்! என்ன சுந்தரம் வேலைக்கு வந்திட்டானா? என்ன செய்யுறீங்க ?

தனா: பையன் டெம்பரை அறிஞ்சேன் !



சுந்தரம்: (சிரிக்கிறான்)

சதி: என்ன சுந்தரம், அவர் டெம்பரவரி என்று சொல்லுகிறார். நீ சிரிக்கறே....

சுந்: இந்த மாதிரி பேசற இடத்திலே வேலே கிடைக்கணுமே.....என் டெம்பரரி அறிஞ்சதான் காயப்படுத்துவாங்க முதலாளி.

தனு: நாளேக் காலேயிலே எஸ். எஸ். எஸ். பையா வீட்டு விலாசத்தை வாங்கிக்கோ. பெரிய கணக்குப் பிள்ளேயிடம் விவரம் கேட்டுக்கோ. வெற்றியடைஞ்சா என்னே வந்து பாரு. இல்லே, நீ வீட்டுக்கே போகலாம்.

சுந்: பெரிய கணக்குப் பிள்ளே எங்காலே இருக்கார்?

தனு (கைகாட்டி): எதிர் அறைக்குள்ளே போய்க் கேள். [போகிறான் சுந்தரம்]

சதி: முதலாளி! பையன் கேஸ் நீண்ட நாள் கேஸ். தீர்த்துப் போடாதிங்க. குணப் படுத்துங்க. என்னே நம்பி நம்பிப் பாவம் கெட்டுப் போயிட்டான்.

தனு: நானும் ஹயரா படிச்சு இருக்கான். வேலே கிடைக்கும். சும்மா அவனே ஒரு பரீட்சை பார்க்கிறேன்; இவன் கெட்டிக் காரத்தனம் எஸ். எஸ். எஸ். பையாவிடம் பலிக்குமா, என்று.

சதி: பையான்னு யாருங்க? எந்தப் பையன்?

தனு: அவரு ஒரு பி. ஏ., பி. எல்.

சதி: வக்கில்லே யாரும் பையா என்று இல்லேயே?

தனு: அதாங்க எஸ். எஸ். சுப்பையா என்கிறதைச் சுருக்கி வைச்சிருக்கார் அந்தப் பையா. (இருவரும் சிரிப்பு)

சதி: அந்தப் பையாவிடம் இந்தப் பையா போய் என்ன செய்வான்?

தனு: 13 ரூபா. 9 அணு. 7 தம்பிடி அவர் பாக்கி.

சதி: நயா பைசா பழக்கத்துக்கு வருகிற துக்கு முன்னுலே நிற்கிற பழைய கடனே?

தனு: அதை வசூல் செய்திட்டான்னு பையனுக்குக் காயப்படுத்துவோம்....

சதி: எஸ். எஸ். எஸ். பையா காயப் படுத்தாமல் சுந்தரத்தை அனுப்பணுமே...!

தனு: காயப்படுத்தட்டும். அப்போ அவர் மேலே கிரிமினல் வழக்குப் போடலாம். என் கணக்கனே அடித்தார் என்று வழக்காடலாம்.

சதி: ஆஸ்பத்திரிக்கு அனுப்பிடாதிங்க.... கோர்ட்டிலே நிறுத்திடாதீங்க. அவன் கடையிலே இருக்கட்டும். [விடைபெறுகிறார்.]

## காட்சி — 3

[மேலும் இரண்டு வாரங்களுக்குப் பிறகு. எஸ். எஸ். எஸ். பையாவின் பங்களாவின் முன் பக்கம் உள்ள அறைக்குள்...]

பையா: பலே! பார்வதி இது காப்பிதானே?

பார்வதி: எப்படி யிருக்குது காப்பி?

பையா: இது அசல் காப்பி. இவ்வளவு நல்ல பால் பட்டணத்தில் எங்கே கிடைச்சுது?

பார்வதி: புதுப் பால்காரன் அசப்பட்டான். கன்னிச் சொட்டாகக் கறந்த பால். இதே பாலேத் தரும் பசு விலேக்கு வருகிறதாம்.

பையா: என்ன விலே?

பார்வதி: இரண்டு படி கறக்கும் மாடு 150 ரூபாயாம். நமக்கே வாங்கி விடலாம்.

பையா: மாட்டைக் கொண்டு வரட்டும்: அட்வான்ஸ் பாதி கொடுப்போம். அப்பாலே மாட்டிலே பால் வந்தாலேயானும் பாக்கிப் பணத்தை மெதுவாகக் கொடுப்போம்.

பார்வதி: இதுதான் உங்கள் உடன் பிறப்புப் பழக்கம் ஆச்சதே. வாங்கலாமா மாட்டை?

பையா: மாடு வரட்டும். யோசிக்கலாம்!

[சுந்தரம் உள்ளே வருகிறான்.]

சுந்தரம்: ஐயா வந்திட்டாங்களாம்மா?

பார்வதி: மாட்டுத் தரகன் வந்திட்டான்... யாரப்பா மாடு.....

பையா: கூப்பிடு, கூப்பிடு முடிச்சிடலாம்.

பார்வதி (சன்னல் வழியே எட்டிப் பார்த்த பிறகு) அட எழவே! தனு செட்டியார் கடை புதுக் கணக்கன்லே வந்திருக்கான். சுந்தரமாம் அவன் பேரு. தினம் தினம் அவன் வர்ருன்.

பையா (உரத்து): யாருடா அவன்? சுத்த தடிப் பயல்!

சுந்தரம்: சார், நானு தடியன்? தடியன் நீயா நானு?

பையா: யார் நீ?

சுந்தரம்: உப்பு போட்டுச் சாப்பிடறவன் உங்க மாதிரி நடப்பானு?

பையா: இந்தப் பையாவிடம் மரியாதை யாகப் பேசு! நானும் உப்புப் போட்டு...

சுந்தரம் (குறுக்கிட்டு): உப்பு மட்டுமா? பருப்பும் நெய்யும் போட்டு, பிஸ்தாவும் பாதாமும் போட்டுச் சாப்பிடறவங்க.

பையா: ஆமா. சாப்பிடறவன். நீ யார் கேக்கறதுக்கு?

சுந்தரம்: பாக்கி நின்னு கேட்டுத்தானே ஆகணுங்க? கேட்டு வாங்கி வரச் சொன்னர் தனு. தாவன்னு.

பையா (சிரிக்கிறார்): புதிதாக வந்த கடை ஆளா நீ?

சுந்தரம்: ஏன் நீங்க சிரிக்கிறீங்க?

பையா: உன்னே வேலேயிலேயிருந்து தள்ளற துக்கு வழி கண்டுபிடிச்சிட்டார். நான் பாக்கி கொடுக்க மாட்டேன். எங்களுக் குள்ளே கணக்குச் சரியில்லே. மரியாதை யாகப் போய்ச் சேரு.

சுந்தரம்: நானும் பதினேந்து நாட்களா நாயா அலேயறேன்....

பையா: எங்களுக்கு நாய் தேவையில்லே:

சுந்தரம்: நாணயம் தேவையின்னு சொல்ல வந்தேன்.

பையா: நீயா எனக்குப் புத்தி சொல்லறே? போடா முட்டாள்.

[கிராமத்து ஆள் ஒருவர் 'சேவிக்கிறேன்' என்று குரல் கொடுக்கிறான்.]

பார்வதி: அவர்தான் நான் சொன்ன தரகர்... வாங்க உள்ளாலே சம்முகம் வாங்க...

தரகன்: என்னமோ கோபமாகச் சண்டை போட்டுக்கிட்டு இருக்கிறீங்களே. நாளேக்கு வர்றேனே.

பார்வதி: அட நீ வாய்யா உள்ளே...

[பார்வதி ரகசியமாகப் பையா காதில் 'தர்க்கம் வேண்டாம். தரகன் போய் விடப் போகிறான்' என்கிறாள்.]

பையா: மாட்டுத் தரகரே! வாருமய்யா.

சுந்: அட நீங்க என்னய்யா, யாரையோ 'வா உள்ளே' என்று கூப்பிடுறீங்க. நானும்

# ஒரு கிளாஸ்
# கிஸான்
## ஸ்க்வாஷ் அருந்தி
## இளைப்பாறுங்கள்

அது சிறந்ததொரு
பழ ரசமாகும்




சுவை மிக்கது; அலுப்பு நீக்குவது; ஆரோக்கியமானது. தானே கனிந்த கனிகளிலிருந்து தயாரானது. வைட்டமின் சத்து நிறைந்தது. கிஸான் ஸ்க்வாஷ் ஆரஞ்சு, லெமன், மற்றும் ஆறு ரகங்களில் கிடைக்கிறது.

**மற்ற எந்தத்
தயாரிப்பையும் விட
கிஸான் ஸ்க்வாஷ்கள்தான்
இந்தியாவில் அதிகமாக
விற்பனையாகின்றன**

**கிஸான் ப்ராடக்ட்ஸ் லிமிடெட் பெங்களூர்**


எழிலோவியமான
பிரிண்டுகள்
பிரிண்டுகளிலே நாகரீகத்தின்
உச்சம். கண்கொள்ளா வியப்பு,
பூரிப்பு, கற்பனைகடந்த வனப்பு:
அவைதாம் எங்கள் வாயில்கள்,
செண்ட்ஸுகள், பாப்லின்கள்,
மற்றும் பிறவகைகள். நவீன
பாணிகளும், பழம்பெரும்
பாணிகளுமாக, பல்வேறு
வண்ண வகைகளிலே கொள்ளை
கொள்ளும் உங்களை, சால்வார்
கமீஸ் உடுப்பாக,நல்லாடையாக,
சேலையாக, ஒளிதவழும்
விளையாட்டுடையாக, உங்களை
நாகரீக எழிலோவியமாக்கக்
காத்திருப்பவை. உங்கள்
உள்ளம் விரும்பும் வனப்போடு
உருப்பெற்ற நெசவு.
சாயாஜி மில்ஸ் நம்பர் 1, பரோடா
அஹமதாபாத்,சாயாஜி மில்ஸ் லிமிடெட்டின் ஒரு பிரிவு ● லக்ஷ்மி மில்ஸ் லிட்.,கேம்பே.
BI-BP-15

பதினேஞ்சு நாளா அலேஞ்சேன்! என் பாக்கி திரட்டும் முதல்லே.

தரகன்: யார் இந்த ஆள், ஏன் கூச்சல் போடருன்?

சுந்தரம்: யாரைப் பார்த்து அவன் இவன் என்று பேசறே? பல் எகிறிப் போகும் சாக்கிரதை.

தரகர்: வரும்போதே தகராருயிருக்கே.

பார்வதி: ஏய்! கடை பாக்கி வாயை மூடு!

சுந்தரம்: பாக்கியைப் போடுங்க. வாயை மூடறேன். பாக்கி கொடுக்க யோக்கியதை இல்லாமல் என்ன பேச்சு?

பார்வதி: என்னுய்யா பாக்கி, பிரமாத பாக்கி. டேய்...

சுந்தரம்: டேயா? மரியாதை அம்மா.

தரகன்: நான் வந்த நேரம் சரியில்லே.

பையா: ஏய் கடை பாக்கி இங்கே வா... எவ்வளவு பாக்கி...?

சுந்தரம்: ரூபாய் பதின்மூன்று: அணு ஒன்பது: தம்பிடி ஏழு — அதாவது பதின்மூன்று ரூபாய் அறுபத்து மூன்று நயே பைசே.

பார்: ரூபாயை முகத்திலே எறியுங்க.

பையா: இந்தா பணம் ஒழி. உன் தலையை இங்கே காட்டாதே.

[ஐந்து ரூபாய் நோட்டு மூன்றைக் கொடுக்கிறர்.]

சுந்தரம்: மிக்க நன்றி. மன்னிச்சிடுங்க. உங்க உத்தம குணம் தெரியாமல் பேசிட்டேன். இதோ பாக்கி.

பையா: பாக்கியை நீயே வைச்சுக்க. ஓடு திரும்பிப் பார்க்காமல்.

சுந்தரம்: ஓடறேன். இனிமேல் ஏன் வர்றேன்? இதிலே பணம் கொடுத்தேன்னு உங்கள் பெயரை எழுதுங்க...

பார்வதி: எழுதி இவனைத் தலைமுழுகுங்க.

[பையா கையெழுத்திட்டுக் கொடுக்கிறர். சுந்தரம் போகிறன்]

பையா: ஒரு வாரம் பாக்கி நின்னு என்னு சண்டைக்கு வர்ருன்?

தரகன்: மட்டு மரியாதை பெருந்தன்மை தெரியாத பசங்க கணக்கு வேலைக்கு வந்தால் உங்களை மாதிரி உள்ளவங்க என்ன செய்வீங்க. மாடு இரண்டாம் ஈத்து. பால் படி இரண்டு. விலைதான் அதிகம். நூற்றி ஐம்பதுக்கு மேலே ஐம்பது ரூபாய் ஆகும்.

பார்வதி: மாட்டை இப்பவே ஓட்டி வர்றதாகச் சொன்னியே சம்முவம்.

தரகன்: வரலாமுன்னு பார்த்தேன். முன் பணம் ஐம்பது ரூபாய் கேட்டான். அதைப் பிரட்டிக் கொண்டு போறேன்.

பையா: நானே நூறு ரூபாய் தாரேன்.

தரகன்: மாட்டைக் கொண்டு வந்து விட்டு விட்டு மொத்தமா பணம் வாங்கிக்கிறேன்.

பார்வதி: எப்போ பார்க்கிறது உன்னையும் மாட்டையும்?

தரகன்: சாயங்காலமா வர்றேன். நம்ம மாட்டுப் பால்தான் சாயங்காலக் காப்பிக்கு.

[போகிறன்.]

பார்வதி: உங்களோட குணத்தை மறந்து மளிகைக் கடைப் பாக்கியைத் தூக்கி எறிஞ்சீங்களே!

பையா: பெரிய விராலைப் பிடிக்கச் சிறு மீனைக் கொடுக்கணும்! ஆமாம், அவன் விலாசம் என்ன சொன்னுன்?

பார்வதி: நாலாவது தெருவிலே மாமரத்து வீடாம்... நம்பர் பத்தொன்பது என்றுன்.

பையா: சரி, பால் மாடு வந்ததும் சிறுகச் சிறுகத்தான் பணம் கொடுக்கணும்.

பார்வதி: ஆமாம், அதுதானே நம்ம பழக்கம்! (சிரிக்கிறர்கள்.)

## காட்சி – 4

[தனு தாவன்னு மளிகைக் கடை எழுத்தாளர் சதி வருகிறர்.]

சதி: நம்ம ரசிகன் சுந்தரம் டெம்பரவரி எப்படி யிருக்குது?

தானு: சரியான டெம்பர். அறிஞ்சு முடிஞ்சும் போச்சு.

சதி: காயப்படுத்திட்டீங்களா?

தானு: எஸ். எஸ். எஸ். பையாவிடம் எப்படிக் கடனை வசூல் செய்தான்னு ஆச்சரியம். வக்கீல் கையெழுத்தும் இருக்குது.

சதி: அவன்தான் எமன் ஆச்சே!

[அப்போது அங்கு வருகிறன் சுந்தரம்]

சுந்தரம்: வணக்கம் அண்ணு. எனக்கு நேத்து முதல் காயம் ஆகிப்போச்சு வேலே.

தானு: இவன் எப்படி வசூல் செய்தான்னு ஆச்சரியம்.

[தரகன் சம்முவம் உள்ளே நுழைகிறன்.]

தரகன்: என்னு சுந்தரம், நம்ம கமிஷனை எடுத்துப் போடு.

தானு: யாரு இந்த ஆள்?

தரகன்: கேளு செட்டியாரே! இந்த ஆள் சுந்தரம் மாட்டுக்காரன்போல் நடிக்கச் சொன்னுரு. கள்ளிச் சொட்டுப் போல் பால் கறந்து ரெண்டு நாள் வக்கீல் வீட்டுக்குக் கொடுத்தேன். மாடு வரும் வருமுன்னு நினைச்சுப் பழைய பாக்கியை எடுத்து வீசினுர் வக்கீல்.

சதி: அடடே! சுந்தரம் நீ கற்பனை உள்ள ஆசாமி. தரகனை வரச் சொல்லிப் பெரிய மீனைக் காட்டிச் சின்ன மீனை வசூல் செய்தே. பலே ஆள்!

சுந்தரம்: உங்க ரசிகன் ஆச்சுதே!

[யாவரும் சிரித்தல்]

சுந்தரம்: பத்து ரூபாய் கமிஷன். என் கணக்கிலே பத்தெழுதிக் கொண்டு கொடுங்க.

[பணம் கொடுத்ததும் தரகன் போகிறன்.]

சதி: நான் வர்றேன்.

[போகிறர். அவரைத் தொடர்ந்து 'அண்ணு, அண்ணு' என வெளியே வருகிறன் சுந்தரம்.]

சதி: என்னப்பா சுந்தரம்?

சுந்தரம்: அண்ணு ஒரு ரகசியம். மன்னிக்கணும்.

சதி: என்னப்பா?

சுந்தரம்: தமிழ், இங்கிலீஷ் லோயர் டைப்பிங் மட்டும் தெரியும். சுருக்கெழுத்து எனக்குத் தெரியாது.

சதி: என்னிடம் எல்லாம் ஹையர் ஹையர் என்றுயே, பொய்தானே! முதலாளிக்குத் தெரிஞ்சா என்ன ஆகும்?

சுந்தரம்: வேலை காயமானதோட உடம்பிலேயும் காயம்தானே உண்டாகும் அண்ணு!

சதி: ஜமாய் ராஜா, ஜமாய்! பையாவை ஏமாற்றினே, என்னையும் ஏமாற்றினே. முதலாளியை ஏமாற்றிவிடாதே!

சுந்தரம்: செய்வேனு அண்ணு!

# டாடாவின் ஷாம்பு





அபூர்வமான பளபளப்பைத் தருகிறது.




நவநாகரீக மாதர்கள் டாடாவின் ஷாம்புவையே உபயோகிக்கின்றனர். காரணம் கூந்தலைச் சுத்தம் செய்வதற்கெனவே விசேஷமாய்த் தயாரிக்கப்படுகிறது. அது. கூந்தலைத் துப்புரவாகவும், சுலபமாயும் சுத்தம் செய்கிறது டாடாவின் ஷாம்பு. கொழிக்கும் அதன் நுரை கூந்தலிலுள்ள தூசியை அகற்றி, கூந்தலைப் பட்டுப்போன்ற மென்மையுடனும். பளபளப்புடனும் மிளிரச்செய்கிறது. நறுமணத்திற்கோ கேட்கவேண்டாம். கூந்தல் சுத்தமாகவும், நறுமணத்துடனும் இருக்க நீங்களும் டாடாவின ஷாம்புவை உபயோகியுங்கள்.

**எழில்மிக்க, மிருதுவான, பரிமளக் கூந்தலுக்கு — டாடாவின் ஷாம்பு!**

BI-TS-59 TAM

''அன்னங்கள் அவை இறப்பதற்கு முன்னால் பாடுகின்றன.; சில பாடகர்கள் அவர்கள் பாடுவதற்கு முன்னால் இறந்து விட்டால் பாதகம் எதுவுமில்லை.''

—ஸாமுவேல் டெய்லர் காலெரிட்ஜ்

ஃ ஃ ஃ

சில வாரங்களுக்கு முன்னர், கோயமுத்தூர் கலெக்டர், பொதுமக்களுக்குத் தமது வாராந்தரப் பேட்டி அளித்தபோது ஒரு ஸ்திரீ, ''என் புருஷன் என்னைத் தள்ளி வைத்து விட்டார். அவரை என்னோடு சேர்த்து வைக்க வேண்டும்'' என்று மனுச் செய்து கொண்டாளாம்.

சில தினங்கள் முன்னர் சென்னை செண்ட்ரல் ஸ்டேஷனில் போலீஸ்காரரிடம் ஒரு ஸ்திரீ புகார் செய்தாள்:

''என் புருஷனும் நானும் மைசூரிலிருந்து வந்தோம். அவர் என்னிடம் ''இங்கேயே இரு! நான் இதோ வந்து விடுகிறேன்'' என்று சொல்லி விட்டுப் போனார். வெகு நேரமாகியும் திரும்பி வரவில்லை. அவர் என்னைக் கைவிட்டு விட்டுப் போய் விட்டார் என்பது நிச்சயம்!''

இந்தச் செய்தி வெளியான அதே தினம், காங்கிரஸ் கட்சியின் பிரதம தலைவர், ''ஒரு தலைவர் என்பவர், மக்களின் கஷ்டங்களில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும். நிர்வாகம் வெற்றி பெறுவது தலைவர்கள் இந்தக் கொள்கைப்படி நடந்து கொள்வதாலும்'' என்று கூறினார்.




இந்தச் செய்திகளையெல்லாம் சேர்த்துப் படிக்கும்போது காங்கிரஸ் கட்சித் தலைவர்களில் ஒருவரான ஒரு மந்திரி, மக்களின் கஷ்டங்களில் தாமும் பங்கெடுத்துக் கொண்டிருக்கும் விஷயம் ஞாபகம் வந்தது.

மகாராஷ்டிர ராஜ்ய மந்திரியான ஸ்ரீ பலாஸ் பகார் தமது மனைவியைத் தள்ளி வைத்து வேறு ஒரு ஸ்திரீயைக் கலியாணம் செய்து கொண்டிருக்கிறார் அல்லவா?

ஃ ஃ ஃ

சட்டசபையில் சில அங்கத்தினர்கள் பேசத் தொடங்கி விட்டால் பிறகு எப்போது நிறுத்துவார்கள் என்று சொல்ல முடியாது. அப்படிப்பட்ட ஒரு பேச்சாளரை மடக்குவதற்குத் தாம் கையாண்ட உத்தியை ஹோமி மோடி தெரிவிக்கிறார்:

''....சட்டசபை விவாதங்கள் பெரும்பாலானவை எவ்வளவு மோசமாயிருக்கும் என்பதை உங்களால் ஊகித்துக் கொள்ள முடியாது. அவை அப்படியிருக்கும் சந்தர்ப்பங்களில் அவற்றின் போக்கை மாற்றத் தமாஷாகவோ, அல்லது அர்த்தமில்லாமலோ கூட எதையாவது ஒன்று சொல்வதைத் தவிர வேறு ஒரு வழியுமில்லை. அதனால் நல்ல பலன் ஏற்படும். ஒரு சந்தர்ப்பம் எனக்கு நன்கு ஞாபகமிருக்கிறது. பெண்களின் கலியாண வயதை உயர்த்துவதைப் பற்றி விவாதம் நடந்து கொண்டிருந்தது. ஒரு தீவிர வைதிக அங்கத்தினர் மூன்று மணி நேரம் இடைவிடாமல் பேசி வந்தார். சிறுமிகளுக்குக் கலியாணம் செய்விப்பதையும், ஓர் ஆண் பலதார மணம் செய்து கொள்வதையும் ஆதரித்து சாஸ்திரங்களிலிருந்து மேற்கோள்களை எடுத்து வீசிக் கொண்டிருந்தார். அவர் மூச்சு விடுவதற்காக ஒரு கணம் பேச்சை நிறுத்தினார்.

உடனே நான், ''ஆகவே, தாங்கள் ஒரு பதினெட்டு வயதுப் பெண்ணுக்குப் பதிலாக இரண்டு, ஒன்பது வயதுப் பெண்களாக இருந்தால் சௌகரியமாயிருக்கும் என்று நினைக்கிறீர்கள் அல்லவா?'' என்றேன்.

இதைக் கேட்டபோது சபையில் எழுந்த பலத்த சிரிப்பு ஏற்பட்டது. இதன் பயனாய்ப் பேசிக் கொண்டிருந்தவர் மனத் தடுமாற்றம் அடைந்தார். மேலே தொடர்ந்து தர்க்க ரீதியாகப் பேச முடியாதவராய் ஏதோ சில வார்த்தைகளை முணுமுணுத்து விட்டு உட்கார்ந்து கொண்டார். சபையினர் எனக்குத் தங்கள் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டார்கள்.....''

ஃ ஃ ஃ

'ஜுரம்' என்பது அழகான பெயர். சொல்வதற்கும், கேட்பதற்கும் எவ்வளவு இனிமையாக இருக்கிறது? இதை ஒரு நோயின் பெயராக ஏன் வைத்தார்களோ தெரியவில்லை!

தமிழ் நாட்டில் சில நகரங்களில் இப்போது பரவியுள்ள டெங்கே, சிக்கென் குன்யா, இந்த ஜுரங்களைப் பற்றிய மர்மம் இப்போது அம்பலமாகி விட்டது. இவை கொசுக்களால் தான் உண்டாகின்றன, கொசுக்கள்தான் இவற்றைப் பரப்புகின்றன என்ற இரகசியத்தை வைத்திய நிபுணர்கள் கண்டு பிடித்தேவிட்டார்கள். விஷ ஜுரங்கள் செயற்கைச் சந்திரனால் உண்டாகின்றனவென்று யாரும் இனி சந்தேகப்பட்டுக் கொண்டிருக்க வேண்டாம்.

ஆகவே கொசுக்களை சம்ஹாரம் செய்ய வேண்டும் என்று சென்னை நகரசபை அதிகாரிகள் தீர்மானித்து, ஊரிலுள்ள குட்டைகள், குளங்கள் இவற்றைப் பற்றிய புள்ளி விவரங்களைச் சேகரிக்கத் தொடங்கி விட்டார்கள். தண்ணீரில் மருந்துகள் தெளிப்பதற்காக அதிகப்படியான ஆட்கள் வேறு நியமிக்கப் படுவார்களாம்.

சாதாரணமாக நகரசபையின் எந்தக் காரியமும் நோட்டீஸ் என்பதில்லாமல் நடைபெறுவதில்லை. எனவே, அதிகாரிகள்,

''....தெரு.... குட்டையில் வசித்துக் கொண்டிருக்கும் கொசுக்களே, நீங்கள் விஷ ஜுரத்தைப் பரப்புவதாக எங்களுக்குத் தக்க சாட்சியங்களுடன் தெரிய வருவதால், டி.டி.டி. முதலிய மருந்துகளால் உங்களைக் கொல்ல பலமான முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன என்பதைக் கண்டிப்பாக அறியவும்''... என்று ஒரு நோட்டீஸ் பிறப்பிப்பார்கள்

போதும்! இதோ என் பக்கத்தில் ரீங்காரம் இட்டுக் கொண்டிருக்கும் சில கொசுக்கள் பேசிக் கொள்வது என் காதில் விழுகிறது:

"நல்ல வேளை! வருஷம் முந்நூற்று அறு பத்தைந்து நாளும் தூங்கிவிட்டுத் திடீரென்று ஒரு நாளைக்குத்தானே வருகிறார்கள்! அதற்குள்தான் நான் ஜுரம் பரப்பும் கடமையை செய்து முடித்து விட்டு ஓடிப் போய்விட வேண்டுமே!"

"இப்போதெல்லாம் வாசனை டி.டி.டி., வாசனை பினைல் வந்திருக்கின்றனவாம். அவற்றைத் தெளித்தால் ஜம்மென்றிருக்கும்!"

"நம் இனம் பெருகுவதை யாரும் தடுக்க முடியாது."

"யார் கண்டார்கள்! நம் விஷயத்தில் குடும்பக் கட்டுப்பாடு செய்யவும் அரசாங்கம் ஒரு சட்டமியற்றினாலும் இயற்றலாம்."

ஃ ஃ ஃ

"என்னருமைக் கமலா,

....இந்த ஊர் முகாம் பல விதத்தில் சௌகரியமா யிருந்தது. அப்பா இன்று கிளம்பித் திருச்சிறுப்பள்ளிக்குப் போய் விட்டு அப்படியே வந்து விடுவார். நான் வருவதற்கு இரண்டு நாட்களாகும்.

சாமான்களை யெல்லாம் மூட்டைகள் கட்டி வைத்துக் கொண்டிருக்கிறேன்.

உன் அம்மா

................

சாமான்கள் என்பது பெட்டி, படுக்கை யல்ல. உளுந்து, பயறு, வேர்க்கடலை, மாவடு முதலியவை. ஜில்லா அல்லது தாலுகா அதிகாரிகளான தங்கள் கணவன்மாருடன் முகாம் போகும் ஸ்திரீகள் சிலர் அந்தந்த ஊரில் கிடைக்கும் சாமான்களை இலவசமாக 'வசூல்' செய்து கொண்டு வருவதைப் பற்றி இப்படி வேடிக்கையாகச் சொல்வதுண்டு. சில பெரிய தற்கால அதிகாரிகளின் மனைவிமாரோ, ரேடியோ, ரெப்ரிஜிரேட்டர், டேப் ரிகார்டர், 'ஸோபா — கம் — பெட்' போன்ற சாமான்களை வசூலிப்பதைப் பற்றிய தகவல்கள் அந்த அதிகாரிகள் பற்றிய விசாரணையிலிருந்து தெரிய வந்தன.




சில மந்திரிகளின் மனைவிமார், பெரிய அளவில் வியாபாரம் செய்ததைப் பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் சிரிப்பாய்ச் சிரித்தன. அந்த ஸ்திரீகளின் கணவன்மார் அவர்கள் பெயரை உபயோகித்து மறைமுகமாக வியாபாரம் செய்தால் அதற்கு அவர்கள் என்ன செய்ய முடியும்? பாவம்!

சென்ற வாரம் ஆந்திர ராஜ்ய சமூக நல அதிகாரியான குமாரி சகுந்தலா என்பவர் இலஞ்சக் குற்றத்துக்காகவும், மற்றக் காரணங்களுக்காகவும் வேலையினின்றும் 'ஸஸ்பெண்டு' செய்யப் பட்டார் என்ற செய்தியைப் படிக்க ஆச்சரியமடைந்தேன். அந்தப் பெண் ஓர் ஐ.ஏ.எஸ். ஆக இல்லாவிட்டாலும் கிட்டத்தட்ட அந்த அந்தஸ்து உள்ளவரா யிருக்கவேண்டும். பெண் அதிகாரிகள் கூட லஞ்சம் வாங்கக் கை நீட்டுவதற்குக் காரணம் இப்போதுள்ள சூழ்நிலையாகத்தான் இருக்க வேண்டும். கோவிலுக்குச் சென்று கடவுள் விக்கிரகத்தைப் பார்க்கும்போது கைகள் தாமாகவே கன்னத்தில் போட்டுக் கொள்கின்றன. அதே போல் காரியாலயங்களில் இருந்தால் கைகள் தாமாகவே நீளுகின்றன போலும். இந்த ரீதியில் நாளடைவில் காரியாலய அறையின் கதவுகள் கூடப் பொதுஜனங்களை உள்ளே விடுவதற்காக லஞ்சம் வாங்கக் கை நீட்டலாம்.

ஃ ஃ ஃ

ராஜ்ய சபையில் லௌன்ஸில் மசோதா விவாதிக்கப்பட்ட போது காங்கிரஸ் அங்கத்தினரான ஸ்ரீ பி. கே. பி. ஸின்ஹா, மஞ்சள் பத்திரிகைகளைக் கண்டித்துக் காரசாரமாகப் பேசினார். மஞ்சள் பத்திரிகை எனப்படுபவை சில இருக்கின்றன என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால் கண்ணியமானவை எனக் கருதப்படும் பத்திரிகைகள் எல்லாவற்றிலும்கூட அந்த மஞ்சள் வாசனை அடிக்கிறது. காரணம் நாட்டில் நடக்கும் சம்பவங்கள் 'மஞ்சள் செய்தி'களாக அமைந்து வந்து கொண்டிருப்பதுதான். சில உதாரணங்கள்:

ஸ்ரீ கெய்ரோன் தமது இஷ்டமித்திர பந்து ஜனங்களுடன் லைசென்ஸ்கள், கோட்டாக்கள் உலகத்தில் திருவிளையாடல்கள் புரிந்தது.

ஸ்ரீ பட்நாய்க் தாம் பத்து வருட காலத்தில் பத்து கோடி ரூபாய் சம்பாதித்ததாகச்சொன்னது: விமானம் ஓட்டுபவரை ஆசனத்திலிருந்து எழுந்து போகச் சொல்லி விட்டுத் தாமே விமானத்தை ஓட்டியது; சீன யுத்தத்தின் போது டில்லியில் சில இலாகாக்கள் மர்மமாக வேலை செய்தன. மாகாண காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் ஒரு சக அங்கத்தினரின் சட்டையைப் பிடித்துக் கிழித்தது.

மாஜி கேரள மந்திரி ஒரு காங்கிரஸ் சமூக சேவகியுடன் மோட்டார் வண்டியில் உல்லாசப் பிரயாணம் செய்தவாறு விபத்துக்குள்ளானது.

ஸ்ரீ பிரேன் மித்ரா பள்ளிக்கூடப் பையன்களைச் சட்டசபையில் அமளி செய்ய விட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது.

கேரளத்தில் காங்கிரஸ் கட்சிக்காரர்களே தங்கள் மந்திரி சபையைக் கவிழ்த்துக் கொண்டது: உத்தரப் பிரதேசத்தில் தங்கள் கட்சி சபாநாயகர் மீதே நடவடிக்கை எடுக்க யோசனை செய்வது.

கோண்டா தேர்தலில் வோட்டு பெட்டியிலுள்ள வோட்டுச் சீட்டுகளில் உள்ள குறிகள் தாமாகவே மாறிக் கொண்டது.

ஸ்ரீ பலாஸ் பகார் தமது மனைவியைத் தள்ளி வைத்து வேறு ஒருத்தியை மணம் செய்து கொண்டது. — என். ஆர்.

# கணவரா?

ர. வேங்கடரத்தினம்

"சரயூ!"

கூப்பிட்டது தந்தைதான்!

சரயூ காகிதக் கற்றையைச் சீராக அடுக்கி வைத்து விட்டு எழுந்தாள். "நானே வந்து விட்டேனம்மா" என்று கூறிக் கொண்டே, கூப்பிட்டவர் அங்கு வந்து நின்றார். வரும்போதே அவருடைய கண்கள் சரயூவின் காகித அடுக்கில் பதிந்தன. பக்கம் பக்கமாக அவள் எப்போதோ அவர் கூறிய சுலோகத்தை எழுதித் தள்ளியிருந்தாள். அவள் எழுதிக் குவித்திருந்த வாசகம் இதுதான்:

'காத்யாயனி மகாமாயே மகா யோகினி யதீச்வரி
நந்த கோப சுதம் தேவி பதிம் மே குரு தே நம:

இவ்வாசகத்தை நம்பிக்கையோடு சொல்லிக் கொண்டு வந்தால், மனத்துக்குகந்த மணாளன் கிடைப்பான் என்று அவர் சொன்னபோது, ஒருகணம் அவளுக்குச் சிரிப்பு வந்து விட்டது.

"அப்பா! நந்தகோபரின் மைந்தனை கண்ணபிரான் என் கணவனாகக் கிடைக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்ளச் சொல்கிறீர்களா ?"

அவளது கேள்வி 'சட்'டென்று அவருக்கு விளங்கவில்லை.

"ஏனம்மா, அப்படிக் கேட்கிறாய்?"

"நான் அவ்வளவு ஆசைப்படலாமா என்றுதான் கேட்கிறேன்."



"திருமணம் ஆகாத பெண்கள் எல்லோரும் அன்னையை வேண்டிக் கொள்ளும் பிரார்த்தனைதானே அம்மா இந்தச் சுலோகம்?"

"அதெல்லாம் சரிதானம்மா. எனக்கு

அத்தனை ஆசை — பேராசை வேண்டுமா ? ஏதோ கடவுள் இஷ்டப்படியான புருஷன் கிடைத்தால் போதாதா?''

அவர் ஏதுமே பேசவில்லை.

''நான் இருக்கிற இலட்சணத்துக்கு, நந்தகோபரின் குமாரனுக்கு ஏன் ஆசைப்பட வேண்டும்? இந்த ஒற்றைக் கண்ணிக்கு..''

சரயூ அவ்வாறு கூறியதற்குக் காரணம் அவளது பார்வையே. மூன்று ஆண்டுகளுக்கு முன் அவளைத் தாக்கிய வைசூரி அவளது ஒரு கண் பார்வையைக் கொண்டு சென்று விட்டது. உடல் குணமாகி எழுந்தபோது, இடது கண்ணின் இமை கீழ் வந்து இறுக்க மூடியிருந்தது. அதனால்தான் 'பேராசை' வேண்டாமே என்றாள். அப்போது அப்படிச் சொன்னாளே ஒழிய, தந்தை சொல்லியவண்ணம் நம்பிக்கையோடு அன்னை மீது அந்தப் பிரார்த்தனையை நெட்டுருப் போட்டு இலட்சக் கணக்கிலே செலுத்தி யிருந்தாள்.

அதைப் பார்த்தபடியே அவர் மொழிந்தார்: ''இந்தாம்மா, கடிதம் வந்திருக்கிறது. அந்தப் பையனுக்குப் பிடித்தமாம். இந்த மாதமே முகூர்த்தம் வைத்துக்கொண்டு விடலாம் என்று எழுதியிருக்கிறான்.''

ஒரு கணம் சரயூவுக்குத் தன் செவிகளையே நம்ப முடியவில்லை.

''உண்மையாகவா, அப்பா ?''

''இதோ, நீயே பார்த்துக் கொள்ளேன்.'' கடிதத்தை அவர் பெண்ணிடம் நீட்டினார்.

சென்ற வாரம் வந்து பெண் பார்த்துவிட்டுப் போன பையன்தான், தன் இசைவு தெரிவித்து எழுதியிருந்தான். சரயூவுக்குத் தான் எங்கோ வானில் பறப்பதுபோல் இருந்தது. அவர் தம் பொக்கை வாயில் புன்னகை வழியப் பிடிபடாப்



பெருமிதத்துடன் பேசினார்: ''ஒன்று மட்டும் சொல்கிறேனம்மா. காத்யாயனி ஸ்தோத்திரத்தை நம்பிக்கையோடு சொன்னால், அது ஒருநாளும் வீண் போகாது.''

விவாகம் வெகு அடக்கமாக நடந்தது. அடக்கமாக நடக்காமல், பின்னே ஆடம்பரமாக நடைபெறப் பெண்ணைப் பெற்றவர் வசதி பெற்றவர் அல்லவே ! பையனுக்கும் உற்றார் — உறவினர் எவரும் இல்லையோ, என்னவோ ? கூட்டம் கிடையாது. ஓய்வு பெற்ற பள்ளி ஆசிரியருக்கு உகந்த இடம்தான் இது.

ஆனால்....

விவாகத்தன்று மாலை ஏழு மணியிருக்கும். மாப்பிள்ளைப் பையன் எங்கோ கிளம்பினான். கிளம்பியவன் திரும்பவேயில்லை.!

மணி எட்டாகியது; ஒன்பது ஆகியது. இரவு முடிந்து. மறு நாள் மலர்ந்தது ; மறு வாரம் வந்தது; மறு மாதம் பிறந்தது; புது ஆண்டே வந்தாயிற்று. ஓடிப்போன பிள்ளையாண்டானின் சங்கதி ஏதுமே காதில் விழவில்லை: பெண்ணைப் பெற்றவர் ஒடிந்து போய் விட்டார்; கைகளைப் பிசைந்தார். ஒரு புறம் பற்களைக் கடிக்க முயன்றார் கோபத்தில். என்ன செய்து என்ன? அப்படிப் போனவன் போனவன் தான். ஆண்டுகள் எவ்வளவோ ஆகிவிட்டன.

பெண்ணும் தன் வாழ்க்கையின் அதிர்ச்சியை மறக்க முயல்கிற எண்ணத்தில் உள்ளூர்த் தொடக்கப் பள்ளி

ஒன்றில் சேர்ந்து பணியாற்றி வரலானுன், அப்பாவுக்கும் தனக்குமாகச் சேர்த்து.

அவள் அப்பொழுது என்னவோ படித்துக் கொண்டிருந்தாள். தந்தை அருகில் வந்து நின்ருர்.

''அம்...மா!'' அவள் தலை நிமிர்ந்தாள்.

'' நான் உனக்கு ரொம்ப அநியாயம் பண்ணி விட்டேன்....'' குரல் கம்மியது கிழவருக்கு.

''என்னப்பா இது பேச்சு!''

'' இல்லையம்மா, உன் வாழ்க்கையைக் குட்டிச்சுவராக்கி விட்டேனம்மா நான்.''

'' வேண்டு மென்று செய்தீர்களப்பா ? அவர் அப்படி ஓடிப் போவார் என்று நீங்கள் கண்டீர்களா ?''

கிழவரின் வாய் துடித்தது. ''என்னம்மா பேசுகிருய் நீ? அவனுக்குப் போய்ச் சப்பைக் கட்டு? கல்யாணப் பந்தலிலிருந்து பாதியிலே ஓடிப் போன பயல் ! வருஷம் பதினைந்து ஆகப்போகிறது விளையாட்டுப்போல. அவனை நினைத்தால் வயிறு பற்றி எரிகிறது....''

சரயூ விருட்டென்று எழுந்து நின்ருள். ''அப்பா! நீங்கள் வீணுய் அவரைப் போய்ப் பாவி, சண்டாளன் என்றெல்லாம் பேசினீர்களானுல், நான் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டேன். ஆமாம், சொல்லி விட்டேன்.''

''நீ என்னம்மா, பேசுகிருய்?''

''அப்பா! எனக்கு உண்மையிலேயே ஒரு சந்தேகம் மனசிலே......''

அவர் ஆவலுடன் அவளை நோக்கினுர்.

''என் இடது கண் குருடு என்பதை அவர் முகூர்த்தத்தின் போதுதான் கவனித்திருப்பாரோ, என்னவோ ? அதைப் பார்த்ததும், நாம் அவரை ஏமாற்றி விட்டோம் என்ற எண்ணத்தில்தான் சொல்லாமல் கொள்ளாமல் போய் விட்டாரோ, என்னவோ?''

பெரியவருக்கு உதடுகள் துடித்தன.

''பெண் பார்க்க வந்தானே, அப்போது மூளை எங்கே போயிற்று அந்த ராஸ்கலுக்கு ? அப்பொழுது பார்க்கவில்லை உன் கண்ணை ?''

''ஏன், கத்துகிறீர்கள் அப்பா? நானும் அது தான் சொல்கிறேன். அப்போது அவர் என்னை ஏறிட்டுக் கூடப் பார்க்க வில்லை. கண்ணைக் கவனித்திருக்க மாட்டார். அதனுல்தான், தாலி கட்டுகிறபோது, முதல் தடவையாக என் குருட்டுக் கண்ணைப் பார்த்தபோது அவர் மனசு குமுறியிருக்கும். நாம் அவர் கண்ணில் மண்ணைத் தூவி விட்டதாக..... அப்பா! நானும் ஒன்று சொல்கிறேன்.''

''என்ன?''

''நாமே உடைத்துச் சொல்லியிருந்திருக்க வேண்டும், ஒரு கண் பார்வை எனக்குக் கிடையாது என்பதை.''

''பின்னே, பெண்ணைப் பார்ப்பது என்பது எதுக்காகவாம் ?''

''திரும்பத் திரும்ப அதையே சொல்கிறீர்களே. அப்பொழுது அவர் கவனித்திருக்க மாட்டார் என்றுதான் சொல்கிறேனே?''

கிழவர் வாய் திறவாது சென்றுவிட்டார்.

சரயூ தூணைத் தடவிக் கொண்டே நடந்து தம்மைத் தாண்டிச் சென்றதை அவர் கவனித்தார். அவர் கண்களில் நீர் பளபளத்தது.

''சரயூ!''

''அப்பா.''

''என்னம்மா இது, தடவிக் கொண்டே நடக்கிருய் ?''

அவள் பதில் பேசவில்லை.

''சரயூ! உன்னைத்தானம்மா கேட்கிறேன்.''

''ஆமாம், அப்பா.''

குழந்தை போலக் கிழவர் அழுதார்.

சரயூ புதிர் அவிழ்த்தாள். ''அப்பா! என் வலது கண்ணிலே சதை வளர்ந்து கொண்டே வருகிறதாம். அதை ஒன்றும் பண்ணுவதற்கில்லையாம். நமக்கு இவ்வளவுதான் கொடுத்து வைத்தது என்று தேற்றிக் கொள்ளத் தெரிந்து கொண்டு விட்டேனப்பா. நீங்களானுல் அழுது கொண்டு நிற்கிறீர்கள்.''

பெரிய மனுஷி போலப் பேசினுள் பெண்; பேதை போலக் கேட்டுக் கொண்டு நின்ருர் பெற்றவர் — பெரியவர்.

அமராவதிக் கரையில் அமைந்துள்ள கஸ்தூரிபாய் இல்லத்தில் சரயூ ஓர் உறுப்பினள். பெரியவர் இருக்கும்போதே செய்து விட்டுச் சென்ற ஏற்பாடு இது. சர்வோதய சங்கத்தினரிடம் சொல்லி, இரண்டு கண்களும் தெரியாத தம் பெண்ணைக் கஸ்தூரிபாய் இல்லத்தில் சேர்த்து விட்டுத்தான் அவர் தம் கண்களை மூடினுர். அங்கு அவரவர் சக்தி, ஆற்றலுக்கேற்ற பணிகள் உண்டு; வயிற்றுக்கும் வாழ்வதற்கும் வகையும் உண்டு. இல்லத்தரசியாக இருந்த அம்மையாருக்குச் சரயூவினிடம் ஒரு தனிப் பாசம். இரண்டு கண்களும் இல்லாதவள் என்பதனுலோ அல்லது அந்நிலைமையிலும் முகம் சுளிக்காது முடிந்த கைவேலை ஏதும் செய்த வண்ணமாகவே இருந்து இல்லத்தின் வருவாயைப் பெருக்கி வந்தாள் என்றே அல்லது மணமான மறு நாளே மணுளனை இழந்து நிற்பவள் என்றே !

''அம்மா, சரயூ அம்மா!'' என்று விளித்த வண்ணம் அந்த இல்லத்துக் காவற்காரன் வந்து நின்ருன்.

''என்ன வேண்டுமப்பா.''

''உங்களைத் தேடிக் கொண்டு யாரோ ஒருவர் வந்திருக்கிருர். உள்ளே போகலாம். நான் கேட்டுக்குப் போகிறேன்'' எனக் கூறி விட்டுக் காவற்காரன் திரும்பினுன்.

சரயூ பேனுவை மூடி வைத்துவிட்டுக் காகிதக் குப்பலை அப்பால் தள்ளிவிட்டு எழுந்தாள்.

''நான்தான் சரயூ'' என்று கூறி அருகில் சென்ருர் வந்தவர்.

சரயூவின் குரல் ''யார் நீங்கள்?'' என்று இயல்பாக வினவியது.

''நான்தான் சரயு.''

அவளுடைய உடல் நெடுகிலும் ஒரு நடுக்கம் ஓடி மறைந்தது. உதடுகள் துடித்தன. மூளை கழன்று விழுந்து விட்டாற் போல் ஓர் உணர்வு. கால்கள் தள்ளாடின. கண்களை மறைத்தது என்ற வழக்கமான வாசகத்துக்கு இடமில்லை. என்றுமே கண்கள் மறைந்த நிலையில்தானே இருந்தன அவளுக்கு?

வந்தவர் மீண்டும் கூறினுர். ''சரயூ, நான் தான்! உன்னை மணப் பந்தலிலேயே விட்டு ஓடினேனே, அதையெல்லாம் மறந்து மன்னித்து....''

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.
மதராஸ்-17

---

## கால்கேட் டூத் பிரஷ்

மேலும் துப்புரவாக உங்கள் பற்களை சுத்தம் செய்யும்படி அமைக்கப்பட்டிருக்கிறது!

4 சைஸ்கள்: ★அடல்ட் ★ஜூனியர் ★சைல்ட் ★பேபி
★ ஹார்ட் ★ மீடியம் ★ ஸாப்ட்

சுகாதார பிளாஸ்டிக் குழாயில் டீலக்ஸும் கிடைக்கும்!

ஸ்டெரிலைஸ் செய்யப்பட்ட நைலான் பிரிஸ்ஸில்கள் உறுதியாக பொருத்தப்பட்டபடியால் அதிக நாள் வரும்.




TB/G/13 TAM.

---

குணத்தில் சிறந்தவை

## ஸ்வஸ்திக் வேதாரணியம் புகையிலை

ஸ்பெஷல் தயாரிப்பு
15 ந. பை.
பிளாஸ்டிக் பொட்டலங்கள்

ARUNA

சரயூவின் கரங்கள் துடித்தன.

அவர் பேசினர். ''இந்த இருபத்தைந்து ஆண்டுகளில் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. என் கண்கள் திறந்து விட்டன. உன் கண் பார்வையை ஏனோ கடவுள் பறித்துக் கொண்டு விட்டார்.''

அவள் பேசவில்லை.

''சரயூ! நீ இரண்டு கண்களையும் இழந்து இங்கே இருப்பதை அறிந்ததும் ஓடி வந்தேன். என்னை மன்னித்துவிடு... பேச மாட்டாயா, சரயூ? இன்னும் என் மேல் கோபமா?''

சரயூவின் மனத்தில் பெரிய கொந்தளிப்பு. அலைகள் பாய்வான. திடீரென்று ஒரு முடிவு செய்தவள் போல் எழுந்து நின்றாள்.

''எங்கே கிளம்பி விட்டாய் சரயூ? நான் உன்னைத் தேடி வந்தேன். நீயானால்...''

''எட்டி நில்லுங்கள்.''

''ஏன்?''

''ஏனாவது? நீங்கள் யாரென்று கண்டேன்? எனக்குக் கண் இருக்கிறதா? யாராகவாவது நீங்கள் இருந்தால்? ஆமாம், இது அன்னை கஸ்தூரிபாய் பெயரில் விளங்கும் இல்லம், ஜாக்கிரதை. திரும்பிப் போங்கள்.''

அவர் சிலையாக நின்றார்.

''கிளம்புங்கள்; வந்த வழியே!''

''நான் திருந்திவந்தது இதற்குத்தானா?''

''ஆமாம்; காலம் தாழ்ந்து வந்தால்?''

''.......''

''அப்பா உயிரோடுஇருந்திருந்தால்ஒருகால் உங்களை அடையாளம் கண்டுகொள்ளலாம். அவர் போய்ப் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆகப்போகிறதே. அவர் இருந்தால்தான் என்ன? உங்களை இன்னாரென்று இத்தனை நாட்கள் கழித்துக் கண்டுபிடித்து விடுவார் என்பது என்ன நிச்சயம்?''

''அப்படியானால், நான் வந்த வழியே...'' இழுத்தார் அவர்.

''ஆமாம், புறப்படுங்கள்.'' கண்டிப்பாகப் பேசினாளே ஒழியக் கண்களில் நீர்த் திரை விடலாயிற்று. ''இரண்டு கண்ணும் அவிந்த பின் வந்து இப்படி நிற்கிறீர்களே? ஒற்றைக் கண்ணியாக எவ்வளவு நாட்கள் இருந்தேன்! உங்கள் — இல்லை, அவர் முகம் மட்டும் இன்னும் கண்களை விட்டு அகலவில்லை. கைத்தலம் பற்றிய மறு கணமே மாயமாய் மறைந்தாலும் அவர் முகத்தைக் கண்டு கொண்டிருப்பேன், கண்ணுள்ளபோது வந்திருந்தால்.'' அவள் தொண்டையை அடைத்துக் கொண்டு வந்தது. விம்மலானாள்.

வந்தவர் தம் கண்களைத் துடைத்துக் கொண்டு சிறிது நேரம் நின்றார்; பின் நடைப் பிணமாக வெளியேறினார்.

சரயூவின் தலையை அன்பொழுகத் தடவியவாறு வந்து நின்றாள் இல்லத் தலைவி.

''அழுதாயா, சரயூ? என்ன இது கண்கள் இப்படி வீங்கியிருக்கின்றன?''

அவள் விசித்தாள்.

''என்ன நடந்தது? யார் அவர் உன்னைத் தேடி வந்தது? அவரும் கண்ணைத் துடைத்துக்கொண்டு போனாரே?''

சரயூ சொன்னாள்: ''அவர்தான் என் கைத்தலம் பற்றியவராம்.''

''என்ன? உன் கணவரா?'' — திகைப்புடன் கேட்டாள் விடுதியின் தாயகி. ''அப்படியானால் ஏன் விட்டுவிட்டாய், கையில் சிக்கிய பறவையை? நாளெல்லாம் காத்தியாயனி துதி எழுதிக் கொண்டிருந்து விட்டு, அம்பிகை அருளிய பிறகு அழவிட்டு வெளியேற்றிவிட்டாயா?''

''இல்லை.'' விம்மினாள் சரயூ.

''பின்னே? வந்தவர் செல்வானேன்?''

''அவர் என் கணவராகவே இருந்தாலும் நான் எப்படி ஏற்பது? கண்ணிரண்டும் இல்லாத என்னை ஏமாற்ற வந்த எந்தப் போக்கிரியாகவாவது இருந்தால்?''

''நீ அப்படி நினைக்கிறாயா?''

அவள் விம்மினாள். இல்லத் தலைவி அவள் செய்கையை ஆமோதித்தாள். ''சரயூ, நீ பெரிய யோகினிதான். வருடக் கணக்காகக் கணவனுக்காகத் தவம் இருந்து விட்டு, அவன் வந்து நின்றபோது தனித் துணிவுடன் அவனையே துறக்க வேண்டிய தியாக நிலை உன்னுடையது. நீ வேறு எதுவும் செய்திருக்க முடியாது.''

எதிரே கூடத்துச் சுவரில் மாட்டியிருந்த அன்னை கஸ்தூரி பாயின் படத்தின் மேல் செருகியிருந்த பூக்களில் ஒன்று நழுவிக் கீழே சரயூவின் முன் வந்து விழுந்தது.

# எக்கோணத்திலும் சரி



## இதோ உங்களுக்குக்

# கூடுதலான பாதுகாப்பு

## அளிக்கக்கூடிய டயர்

இந்த டிரெட் அமைப்பு, மோட்டாரோட்டிகளுக்கு மிகவும் அதிகமான பாதுகாப்பளிப்பதற்கெனப் பல வருடங்களாக சோதனைத்தளங்களிலும் ஓட்டப் பந்தயப் பாதைகளிலும் ஆராய்ந்து சோதிக்கப் பட்டதாகும். ஆயிரக்கணக்கான கோணங்கள் ரஸ்தாவைக் கவ்விப் பிடிப்பதால், சுலபமாக வண்டியை ஓட்டுவதற்கு உதவுவதுடன் நீங்கள் ஓட்டத் தொடங்கும்போதும் நிறுத்தும்போதும் இவை சிறந்த இழுப்புத் தன்மையை அளிக்கின்றன. பயர்ஸ்டோனை வாங்கும்போது நீங்கள் எதைப் பெறுகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும்.

# Firestone

## பயர்ஸ்டோன்

நியூ டிலக்ஸ் சாம்பியன் டயர்

பயர்ஸ்டோன் தரத்துக்கும் உழைப்புக்கும் உங்கள் சின்னம்

"அந்தப் பாப்பா கெட்ட பாப்பா, சாமி கிட்டப் போய் விட்டது. நீ பாலைக் குடி உமேஷ்!" என்று அப்பா பரிதாபமாகக் கெஞ்சினார்.

"சாமியிடம் எப்படிப் போகும்? நீ போய் சொல்லறே!" என்று அழுதான் உமேஷ்.

கட்டிலில் படுத்துக் கொண்டிருந்த விஜயம் குலுங்கினாள். ஆஸ்பத்திரிக்கு அவன் தந்தையுடன் முதல் நாள் பாப்பாவையும் அம்மாவையும் பார்க்க வந்தபோது, வீட்டுக்குத் திரும்ப மாட்டேன் என்று பிடிவாதம் செய்தான். அந்த நேரத்தில் அடம் பிடித்தால் குழந்தையை அவர்களுக்குக் கொடுப்பேன். இவர்களுக்குக் கொடுப்பேன் என்று அவள் மிரட்டியது உண்மைதான். ஆனால் தெய்வசித்தம் இப்படி இருக்கும் என்று எதிர் பார்த்தே இருக்க வில்லையே? குழந்தை வெகு நாட்களாக மனத்தின் கோடியில் தொட்டுத் தொட்டுப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்த ஆசைக் கனியுடன் அம்மா வரப் போகிறாள் என்பதை எதிர்பார்த்துச் சொல்லொணா ஏமாற்றமடைந்தான். வெறி கொண்டாற்போல் தன் குஞ்சுக் கைகளால் ஓங்கி ஓங்கி விஜயத்தை அடித்தான்.

"பாப்பாவை யாருக்கோ கொடுத்துட்டே, நான் சமர்த்தா இருக்க மாட்டேன்னு ஆஸ்பத்திரி அக்காவிடமே கொடுத்திட்டாயா? நான் சமர்த்தா இருப்பேன்" என்று கெஞ்சினான். பதில் வராமல் போகவே ஆத்திரத்துடன் பால் பாத்திரத்தைக் கையால் எற்றினான். பால் கீழே ஓட, பாத்திரம் உருண்டது. குழந்தை என்று பாராமல் சாரநாதன் ஓர் அறை வைத்தான். உமேஷ் புரண்டு புரண்டு அழுதான். விலைமதிக்க வொண்ணாப் பெருநிதிப் பேழையின் திறவுகோல் தொலைந்து விட்டாற் போல் கலங்கி நின்ற அத்தம்பதியின் முன் திறவுகோலுடன் வரும் தேவதையைப் போல் அப்போது அந்தக் குழந்தை வாயிலில் வந்து நின்றாள்.




"உமேஷ்! ஏண்டா கண்ணு அழறே? என்னிடம் பாலைக் கொடுங்கள் மாமா, உமேஷ் எனக்கு ரொம்பச் சிநேகம். நான் ஸ்கூலுக்குப் போகும் போதெல்லாம் சிரிப்பான், டாடா சொல்வான். பார்க்குக்கு வந்தால் விளையாடு வான் என்னுடன்...." என்று அவனுக்கும் தனக்கும் இடையே உள்ள தொடர்பை வெளியிட்டு உரிமையை நிலைநாட்டிக் கொண்ட சிறுமியை வியப்புடன் அப்பா நோக்கினார். அம்மாவும் பார்த்தாள். பத்து வயதுக்குள் மதிக்கலாம். பள்ளிச் சீருடையில் தெருவில் செல்லும் குழந்தைகளில் ஒருத்தியாக அறிமுகமான குழந்தைதான். நல்ல சிவப்பு. குறுகுறுக்கும் முகம். கூந்தலைப் பின்னிப் போடாமல் வழித்து வாரி, முன்புறம் கிரீடம் வைத்தாற்போல் சிவப்பு ரிப்பனை முடிந்திருந்தாள். பெரிய பெரிய பூக்கள் அச்சிடப் பெற்ற சீட்டிக் கவுன் அணிந்து நெருங்கிய அவளை உமேஷும் அழுகையை நிறுத்திவிட்டுப் பார்த்தான்.

"எங்க அம்மா, பாப்பாவை உங்க வீட்டுக்குக் கொடுத்தாங்களா?"

அவன் சாதுரியமாக அளித்த பதில் சாரநாதனையும் விஜயத்தையும் மூக்கின் மேல் விரலை வைக்கச் செய்தது.

"நீ எங்க வீட்டுக்கு வரியா உமேஷ்? எங்க வீட்டிலே நாம் விளையாடலாம்! எனக்கு இன்னிக்கு ஸ்கூல் லீவு..."

"உங்க வீட்டிலேதான் பாப்பா இருக்கா?"

பட்டுப்பூச்சி விழி இதழ்களைக் கொட்டிக் கொண்டு அவள் தலையை ஆட்டினாள். "ஓ! நீ வந்தால் தருவேன். நீ பால் குடிச்சிட்டுத் தலை வாரி, சட்டை போட்டுக்கிட்டு வரியா?"

"ஆமாம். நீ அக்கா கூடப் போய் விளையாடிட்டு வா, உமேஷ்..." என்று விஜயம் ஆமோதித்தாள். அப்பா உள்ளே சென்று பால் டம்ளரைக் கொண்டு வந்தார்.

இதற்குப் பிறகு பால் குடித்தல், முகம் துடைப்புச் சிங்காரங்கள் எல்லாம் வெகு விரைவில் நிறைவேறின.

"உன் பேரென்னம்மா? உங்கள் வீடு எங்கே இருக்கிறது?" என்று விஜயம் அந்தக் குழந்தையிடம் படி இறங்கு முன் கேட்டாள்.

''என் பேர் ரோகிணி. எங்கள் வீடு, இங்கேதான் நவீன் ஸ்டோருக்குப் பக்கத்தில். வா உமேஷ், நாம் போகலாம்'' என்று கிளம்பினாள் அவள்.

தெருவில் இறங்கி அவர்கள் மறைந்ததும் சாரதாதன், 'அப்பாடா!' என்று பெருமூச்செறிந்தாள்.

''அதற்குள் சந்தோஷப்பட்டு விடாதீர்கள். அங்கே போய்ப் பாப்பாவைக் கொண்டா என்று சொல்லாமலிருக்க வேண்டுமே? என் நாவில் இருந்து அப்படி ஒரு விஷச் சொல் ஏன் வந்தது அன்று!'' என்று விஜயம் புலம்பினாள்.

''நீ இப்படி வேறு அலட்டிக் கொண்டு காய்ச்சலை வரவழைத்துக் கொள்ளாதே விஜி, இந்தக் குழந்தைக்கு இருக்கும் சாதுரியமான அறிவு நமக்கு இல்லை. அவள் சமாளிப்பாள். நவீன் ஸ்டோருக்குப் பக்கத்து வீட்டில் 'டிரில் பிட்ஸ்' மாதிரி ஒரே சாயலில் ஐந்தாறு குழந்தைகள் இருக்கின்றன. அந்த வீட்டுக் குழந்தையா இவள்? சாயல் நவீனமாக, வேறாக இருக்கிறதே?...''

''எனக்குக் கூடக் கடவுளாகப் பார்த்து அனுப்பி வைத்த மாதிரி இருக்கிறது. குழந்தை குழந்தையைப் புரிந்துகொள்வது போல் நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. கடவுளே, குழந்தைகளிடம் பொய் சொல்வது, தெய்வ சந்நிதியில் பொய் கூறி ஏமாற்றுவது போல். இனி மறந்தும் இது போல் செய்ய மாட்டேன்!'' என்று கூறிக் கொண்டாள் விஜயம்.

ரோகிணியிடம் என்ன மாயம் இருந்ததோ? உமேஷ் பாப்பாவை அடியோடு மறந்தவனாக, ஒரு சிரிப்புடன் பகல் சாப்பாடு நேரத்தில் அவளோடு வீடு திரும்பி வந்தான். ஒரு கையுடைந்த பொம்மையும், மூக்குடைந்த பொம்மையும் மணமக்களாயின. விமரிசையாக ரோகிணி அவர்கள் வீட்டிலேயே கல்யாணத்தை நடத்தினாள். கல்யாண விருந்துக்குப் பின் ரோகிணி பள்ளிக்கூடத்தில் கற்ற நடனங்களை ஆடிப் பாடி, விருந்தினனான உமேஷ், பார்வையாளராக இருந்த விஜயம் இருவரையும் மகிழ்ச்சியில் ஆழ்த்தினாள். அன்றிரவுவரையிலும் ரோகிணி அங்கேதான் இருந்தாள். வெகு நாட்கள் பழகிய தாய்போல் உமேஷைத் தட்டித் தூங்க வைத்து விட்டே வீட்டுக்குப் போனாள்.

''உங்கள் வீட்டில் கோபித்துக் கொள்ள மாட்டார்களா, ரோகிணி? உமேஷ், அக்காவை நாளைக்கு வரச் சொல்!'' என்றெல்லாம் விஜயம் சங்கடத்தைத் தெரிவித்தாலும் அவள் பொருட்படுத்தவில்லை.

''எங்க மாமி என்னை இங்கே இருக்கலாம் என்று சொல்லி யிருக்காங்க அக்கா! உமேஷுக்காகத்தானே இருக்கேன்?'' என்றாள்.

''உங்கப்பா, அம்மா இங்கே இல்லையா, ரோகிணி?''

''இல்லை அக்கா. எங்கப்பாவுக்கு மூவாயிரம் ரூபாய் சம்பளம். டில்லியில் இருக்கிறார். ஆயாவெல்லாம் நன்றாகக் கவனிக்க மாட்டாங்கன்னு இங்கேயே இருக்கவிட்டிருக்கிறார். எங்கப்பாவுக்கு என் மேல் ரொம்பப் பிரியம் அக்கா!'' என்றாள் விழிகள் ஒளிர.

திருமதியின் பார்வையில் வேறு வண்ணம் பளிச்சென்று மாறிவிட்டாற் போல் விஜயத்துக்கு வியப்புத் தோன்றியது. சொற்களை ஆண்டு பழகாதவன் வெளியீடு செய்த கவிதையைப் படித்தாற் போன்ற அநுபவம் உண்டாயிற்று அவளுக்கு. என்றாலும் மேலே கேள்வி கேட்கவில்லை.

விதையை மூடியிருந்த தோடு கடினமாக விதையைக் கடித்துக் கொண்டிருந்தாலும் உட்குருத்து தோன்றத் தொடங்கியதும், அந்தத் தோடும் நழுவிப் போகிறது. உமேஷ் ரோகிணி அக்காவின் அன்புத் தொடர்பிலே பாப்பாவையே மறந்து போனான். ஆனால் இந்தப் புது உறவு குருத்து விட்டு, வெகு விரைவில் அழகாக வளர்ந்தது: காலையில் அவன் கண் விழித்துக் கொள்கையிலேயே ரோகிணி காலைப் புதிய ரோஜாவைப் போல் சிரித்துக் கொண்டு ஓடி வருவாள். உமேஷினுடைய பல் துலக்கல், பால் குடிப்பு எல்லாம் அவள் உதவியுடனேயே நிகழ்ந்தன. ரோகிணி அங்கேதான் வீட்டுப் பாடங்களை எழுதி முடித்தாள். பிறகு ஒரு நொடியில் வீட்டுக்குச் சென்று குளித்து, உடை மாற்றி, உணவு கொண்டு, பள்ளிக்குச் செல்ல ஓடி வருவாள். வழியில்-உமேஷ் தன் பிஞ்சுக் கரங்களை ஆட்டி விடை கொடுப்பான். மாலையில் பள்ளி விட்டு வந்த பின்னரும் அவனுடனேயே விளையாட்டு. அவன் இரவு எட்டு மணிக்கு உறங்கும் வரையிலும் அங்கேயே இருக்கை என்று உறுதியாயிற்று.

மாலை வேளைகளில் ஏழெட்டு வயசு இடைவெளியுள்ள அந்தக் குழந்தைகள் இருவரும் ஆடிக் களிப்பதையும், ஓடிப் பிடிப்பதையும் அவனுக்கேற்ப அவள் மகிழ்வதையும் விஜயம் வாசற்படியில் அமர்ந்து வியப்புடன் நோக்குவாள். அவனுடைய மாமன் குழந்தைகளிடம் இல்லாத இந்தப் பிடிப்பு அவனுக்கு எப்படி உண்டாயிற்று?

உமேஷ் அளவுக்கு மீறிய உரிமையிலும் சலுகையிலும் அவளை அடிப்பான்; உதைப்பான்; பள்ளிக்குச் செல்ல விடாமல் கூடத் துன்புறுத்துவான். ''நான் ஸ்கூலுக்குப் போக வேண்டாமா உமேஷ்?'' என்று பையைக் கீழே வைத்துவிட்டு அவனை இடுப்பில் தூக்கி வைத்துக்கொள்வாள். அசைப்பில் அவளைப் பார்க்கையில் அந்தக் குதிரை வால் கட்டு, சிறுடைக் கோலம் மறைந்து ஓர் இளந் தாயே மெல்ல முறுவலிப்பதுபோல் தோன்றுவாள்.

விஜயம் ஒரு கணம் சிலிர்ப்போடு தன்னை மறந்து நிற்பாள்.

''நீ ஸ்கூலுக்குப் போடி குழந்தை!'' என்று பையை வாங்கிக் கொண்டு அவளை அனுப்பி வைப்பாள்.

அன்று பகல் ஒரு மணி இருக்கும். உமேஷ் பகல் உறக்கத்திலின்றும் விழித்திருக்கவில்லை. விஜயம் நல்லெண்ணெய் டப்பாவைத் துடைத்துக்கொண்டிருந்தாள். அப்போது ஓசையின்றி ரோகிணி தயங்கித் தயங்கி வந்து நின்றாள். பள்ளிக்கூடம் போகும் கோலம்.

''என்னம்மா ரோகிணி?''

கண்கள் கூச, குரல் குழைய நேருக்கு நேர் அவளைப் பாராமலே ''அக்கா! நான் ஒன்று கேட்கட்டுமா? தருவீர்களா?'' என்று பீடிகை போட்டாள் ரோகிணி.

''நீ கேட்டு நான் உனக்கு இல்லை என்று சொல்வேனா?''

''...எங்க ஸ்கூலில் [illegible] பில்டிங் [illegible] பண்டுக்கு எல்லாரையும் அவரவர் அப்பா சம்பளத்துக்குத் தகுந்தபடி... பணம் கேட்டாங்க. எங்கப்பா நான் எழுதினால் நிச்சயம் அனுப்பி விடுவார், உடனே?...ஆனா... எங்கேயாவது நேர் போயிருந்தால், கடிதாசி வந்து பார்த்து அனுப்ப ரொம்ப நாட்களாகுமே அக்கா...? டீச்சர் பணம் நாளைக்கே கொடுக்க வேணும்னு சொல்றாங்க. மாமா, மாமி ஒரு ரூபா கொடுத்தால் போதும்னு சொல்லிட்டாங்க. அது எப்படி அக்கா? எங்கப்பா மூவாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும்போது டீச்சர் ஒரு ரூபாய் வாங்குவாங்களா?... இருபத்தைந்து ரூபாய் நீங்கள் கொடுத்தால் நான் அப்பாவிடமிருந்து பணம் வந்ததும் கொடுத்திடுவேன், அக்கா!''

இதுபோன்ற சந்தர்ப்பங்களைச் சமாளிக்க, வாழ்க்கையில் விஜயத்துக்கு அதுவரையிலும் அநுபவம் ஏற்படவில்லை. ரோகிணியின் மாமன் மாமியை எப்போதோ தெருவில் அசைப்பில் பார்த்திருந்ததோடு சரி. மாமாவின் குழந்தைகள் கூட ரோகிணியின் கூட அவள் வீட்டுக்கு வந்ததில்லை. அந்தக் குழந்தைகளிலிருந்து பளிச்சென்று வேறுபட்டு நிற்கும் ரோகிணி உண்மையே சொல்கிறாளோ? குழந்தையை நம்பி ரூபாயைக் கொடுக்கலாமா? ஆனால் அந்தக் குழந்தையை நம்பி உமேஷை அனுப்பவில்லையா அவள்?

விஜயம் மறுமொழியின்றி, எண்ணெய்க் கைகளைக் கூட நன்றாகத் துடைத்துக் கொள்ளாமல் இரண்டு பத்து ரூபாய் நோட்டுக்களையும், ஒரு ஐந்து ரூபாய் நோட்டையும் எடுத்து வந்து ரோகிணியிடம் கொடுத்தாள்.

ரோகிணியின் கண்கள் பளபளத்தன. ''நீங்கள் என் மீது எத்தனை அன்பு வைத்திருக்கிறீர்கள் அக்கா! அப்பாவிடமிருந்து பணம் வந்ததும் திருப்பிக் கொடுத்து விடுவேன்'' என்று சொல்லிவிட்டு ஓடினாள்.

''அவளுடைய மாமாவோ, மாமியோ யார் என்று தெரியாத நிலையிலா ரூபாயைத் தூக்கிக் கொடுத்தாய்?'' என்று கேட்டான் சாரநாதன்.

''மாமா, மாமியிடம் சொல்வதனால் குழந்தை மனசு நோகும் என்று நினைத்தேன். அவள் நமக்குச் செய்திருக்கும் உதவி அற்பமில்லை!'' என்றாள் விஜயம்.

''உன்னையும் அவள் மயக்கி விட்டாள். மூவாயிரம் ரூபாய் சம்பாதிப்பவர், அன்பு வைத்திருப்பவராக இருந்தால் இந்தக் குழந்தையை இந்த நெருக்கத்தில் விட்டு வைப்பாரா? குழந்தை கெட்டிக்காரி. பண விஷயம் மட்டும் நீ இடம் கொடுக்கக்கூடாது'' என்றான் அவன் கண்டிப்பாக.

''குழந்தை ஒன்றும் ஏமாற்ற மாட்டாள். தாயன்புக்கு ஏங்கிய அவள், தன்னையறியாமலே தனக்குக் கிடைக்காததைப் பிறருக்குத் தர முற்படுகிறாள். அவள் கேட்டு என்னால் மறுக்க முடியவில்லை...'' என்றாள் விஜயம். ஏதோ சமாதானம் கூறிவிட்டாலும் கணவனின் கூற்றில் உண்மை இருந்ததாகவே உறுத்தியது.

மறு நாள் மாலை நாலரை மணிக்கு ரோகிணி பள்ளிக்கூடப் பையுடனே ஒரே மகிழ்ச்சியுடன் ஓடி வந்தாள். உமேஷைத் தூக்கிக் கொண்டு ஒரு குதிப்பு, துள்ளல், நடனம்.

''என்னம்மா, ரோகிணி? உனக்கு இவ்வளவு ஆனந்தம்?''

பள்ளிக்கூடப் பையிலிருந்து ஒரு பழுப்புக் காகிதப் பையை அவள் எடுத்தாள்.

''இதோ பாருங்கள் அக்கா! எங்கப்பா எனக்கு டில்லியிலிருந்து பிறந்த நாளுக்கு அனுப்பியிருக்கும் ஃப்ராக்!''

உறையிலிருந்து நழுவியது மின்னும் நைலான் ஃப்ராக் ஒன்று. தையற் கூலியே பல ரூபாய்களை விழுங்கியிருக்கும். அலையலையான மடிப்புக்களும் லேஸ்களுமாக, சிறுமியின் உள்ளம் கொள்ளை கொள்ளும் இளநீல வண்ண உடை.

''வெகு நேர்த்தியாக இருக்கிறது. ரோகிணி! உனக்கு என்றைக்குப் பிறந்த நாள் என்று சொல்லவேயில்லையே?''

''அக்கா! அடுத்த மாதம் இருபதாம் தேதி நான் அங்கே இருந்தால் பெரிய பார்ட்டி கொடுப்பார் அப்பா!''

''யார் கண்டார்கள்? உங்கப்பாவே வருகிறாரோ என்னவோ? ரோகிணியைப் பார்க்க.''

''.....அப்பாவுக்கு வேலை ரொம்ப அதிகம் அக்கா, வரமாட்டார்'' என்று கூறுகையில் குழந்தையின் முகத்தில் துயரச் சாயை ஓடியதை அவள் கவனியாமல் இல்லை.

''நீ இதைப் போட்டுக்கோ ரோகிணி அக்கா! நானும் பொம்மைச் சட்டை போட்டுண்டு வரேன். நாம் பார்க்குக்குப் போய் வருவோம்'' என்றான் உமேஷ்.

''இப்ப வேண்டாம் உமேஷ். அழுக்காகி விடும். அப்புறமா, ஞாயிற்றுக்கிழமை போட்டுக்கிடலாம்!'' என்று அதை வெகு கவனமாக வாங்கிப் பைக்குள் போட்டாள் ரோகிணி. வழக்கம் போல் அன்றிரவு உமேஷ் தூங்கிய பிறகே வீட்டுக்குச் சென்றாள்.

மறு நாட் காலையில் ரோகிணி வரவில்லை. மணி ஏழரையாகியும் அவள் குரல் கேட்கவில்லை. ''ரோகிணி அக்கா எங்கே?'' என்று கேட்டபடி, உமேஷ் எழுந்து பல் துலக்காமல் முரண்டு செய்து கொண்டிருந்தான்.

''ரோகிணி இங்கே இருக்குதாம்மா?''

குரல் கேட்டு விஜயம் வாயிலுக்குத் திரும்பிப் பார்த்தாள்.

ரோகிணியின் மாமிதான். சாயம் மங்கிய புடவை. கவனமில்லாமல் முடிந்த கூந்தல். பற்றாத வருவாயுடன் குடும்பத்தில் போராடும் தோற்றம். அவளுடன் சாரநாதன் '[illegible]' என்று விவரித்ததற்கேற்ப மூன்று குழந்தைகள் ஒரே சாயலில் வரிசைக் கிரமமாக்கும்படி தொடர்ந்து வந்திருந்தன. ஸாடின் பாவாடைச் சட்டை அணிந்த செல்வச் சிறுமியாக ஒரு குழந்தையும் ரோகிணியின் வயதில் வந்திருந்தாள்.

''வாங்கம்மா, ரோகிணியை இன்று காணவில்லையே, வாருங்கள், உட்காருங்கள்...'' என்று விஜயம் வரவேற்றாள்.

''உக்கார நேரமில்லையம்மா'' என்று புடவைத் தலைப்பின் மறைப்பிலிருந்து முதல் நாள் ரோகிணி கொணர்ந்து காட்டிய ஃப்ராக்கை வெளியாக்கினாள். ''இந்த ஃப்ராக் ரோகிணிக்கு நீங்கள் வாங்கித் தந்தீர்களா?''

விஜயம் திகைப்பூண்டை மிதித்தாற் போல் நின்றாள்.

"நேற்று ராத்திரியே புத்தகப் பையில் பார்த்தேன். ஏதடி என்று அதட்டினேன். உமேஷின் அம்மா பிறந்த நாளுக்கு வாங்கித் தந்தாங்க என்றாள். எனக்கு அப்போதே உங்களிடம் வந்து கேட்க வேண்டும் என்று எண்ணம். இன்றைக்குக் காலையில் இந்தப் பெண் வந்து கேட்கிறாள். 'இது போல் தைக்க மாதிரி கேட்டாங்க, கொடு' என்று கேட்டு வாங்கி வந்தாளாம். எங்கே போறாளோ, நான் இங்கே இருப்பாளென்று வந்தேன்."

"இல்லையே..." என்று சமாளித்த விஜயம் மென்று விழுங்கினாள்.

"...நான் தைத்துக் கொடுக்கவில்லை. ஆனால் நான்தான் மாதிரிக்கு வாங்கிவரச் சொன்னேன். கோபித்துக் கொள்ளாதீர்கள் அவளை!" என்ற விஜயம் அந்தப் பெண்ணிடம் "இந்தாம்மா, பத்திரம். வாங்கிட்டு ஓடிப் போ!" என்று பாவாடை சட்டை அணிந்த பெண்ணிடம் அதைக் கொடுத்தாள். அவள் வாங்கிக்கொண்டு படி இறங்கிப் போனாள்.

"பெரிய இடத்துப் பொல்லாப்பு. ஜட்ஜ் மகனம்மா அது! வித விதமாகத் துணி தைப்பார்கள் போலிருக்கிறது. நானும் ஆறு வைத்திருக்கிறேன். இப்படி ஓர் அடாவடி ஆசைப்படத் தெரியாது. ஏது தைக்கிறேனோ, போடுகிறேனோ... அதேதான். இவள் மட்டும் பெரி....ய நினைப்புக்காரி. உங்களிடம் ஏதேனும் வேண்டுமென்று தொந்தரவு செய்கிறாளா அம்மா?"

"...சே... அதெல்லாம் இல்லை. உண்மையில் தங்கமான குழந்தை. உமேஷ் இதோ அழுது கொண்டிருக்கிறான். நானே தான் அவன் பிறந்த நாளுக்குத் துணி தைத்துக் கொடுக்கும் ஆசையில் கேட்டேன்."

"உங்களைப் போன்றவர்களின் ஆசையும் அன்பும்தான்... என்னவோ போங்க. எங்களில் ஒருத்தருக்கு இத்தனை புத்தி கூடவே அறிவு கிடையாது. நான் ஆறோடு ஏழாக வைத்துக் கொள்ள வேண்டுமே? கடவுள் அதுதான் இப்படி வைத்திருக்கிறான்..." என்று பெருமூச்செறிந்தாள்.

"..... குழந்தை தாயில்லை என்ற குறை தெரியாதபடி இருக்கிறான். அவன் அப்பாவிடம் லீவுக்குத்தான் போவானோ?"

அந்த மாமியின் விழிகளில் வியப்பு மேலோங்கிற்று.

"அப்படிச் சொல்லிக்கிட்டானாம்மா?"

"இல்லை... மூவாயிரம் ரூபாய் சம்பாதிக்கும் அப்பா வசதி இல்லாதவரா? நீங்கள் குழந்தையைக் குறை தெரியாமல்..." விஜயம் அவள் மூளைப் போக்கைக் கண்டு சட்டென்று நிறுத்தி விட்டாள்.

"அடி கழுதை! இதெல்லாம் வேறு சொல்லிக் கொள்கிறானா? தாலிக் கயிற்றைப் போட்டுக் கொள்ளுமுன் அவமானம் வந்து விட்டதே! மகா கெட்டிக்காரியம்மா அவ அம்மா. ரோசக்காரி, மானி. ஒரு சொல் தாங்க மாட்டாள். டெலிபோன் ஆபிஸிலே வேலைக்கிருந்தாள். கடைசியில் என் காலடியில் வந்து இதைப் பெத்துவிட்டுப் போய் விட்டாள். அவன் மாமா ஜாடையாய்த்தான் அன்றைக்கொரு நாள் அவருக்கு மூவாயிரம் ரூபாய் சம்பளம் ஆகியிருக்கிறதென்று பேசினார். காதில் பட்டு, மனசோடு நினைச்சிட்டிருக்கிறான், பாரேன்?... அடி கட்டி மகனே? நான் நிச்சயமாய் அவன் மனசிலே இதெல்லாம் தெரிஞ்சிருக்குமின்னு நெனைக்கலியே? மானம் போச்சென்று உயிரை விட்டவளம்மா அவளைப் பெத்தவ..." மாமி அதிசயித்தாள்.

விஜயமோ, இதற்கு மேலும் அந்தக் கட்டி மகனின் மனசில் கற்பனைக் கோலங்கள் உருவாகியிருப்பதைச் சொல்லிக் கொள்ளாமல் அடக்கிக் கொண்டாள்.

"... ஆனால்... நீங்கள் ஒன்றும் கேட்கவில்லையா அம்மா அவரிடம்?" என்று கேட்டாள்.

"சே, கேவலம். நம்ம பெண்ணே போய் விட்டாள். அவன் இருந்தாலே போய்ச் சொல்லிக் கொள்ள மாட்டான். அந்த ஆள் இப்போது கல்யாணம் செய்து கொண்டு குழந்தை குட்டியோடு இருப்பவராக இருக்கும். ஏதோ நாலெழுத்துக் கற்றுக்கொடுத்து விட்டால் அவனும் பிழைத்துக் கொள்கிறான். ஆனால் பெண் குழந்தைகளை வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு வளர்க்க வேணுமம்மா. நாங்கள் சூடு பட்டுவிட்டோம். நான் வரேனம்மா. நேரமாய்ப் போச்சு. அவள் வந்தால் அதிகம் செல்லம் காட்டாமல் கண்டிச்சு வையுங்கள்!"

"நீங்கள்...நான் சொன்னது ஒன்றையும் அவனிடம் கேட்க வேண்டாமம்மா!" என்று விஜயம் விடை கொடுத்தாள்.

பச்சை மண்ணில் அங்கொன்றும், இங்கொன்றுமாகத் தெறித்து விழுந்த அரசல் பொரசலான பேச்சுக்களும், ஜாடைகளும் வேரூன்றி அவன் குறையை நிறைவாக்கிக் கொண்டு மகிழக் கற்பனைகளுக்கும் இடம் தந்த விந்தையை என்னவென்று சொல்வது?

விஜயம் அன்று உமேஷைக் கவனியாமல் உள்ளே கணவன் உண்ட கலம் கழுவாமல் வாயிலிலேயே நின்றாள். பள்ளிக்குச் செல்லும் குழந்தைகள் தெருவையே கலகலப்பாக்கினார்கள். கும்பலாகச் சென்ற கருநீலப் பட்டாம் பூச்சிகளில் ஒன்று தனியே பிரிந்து வருவதுபோல் ரோஜினி வந்தாள். நடையிலே துள்ளல் இல்லை. ஒரு குழைவு; நாணம்.

வந்தவள் அவள் விழிகளைச் சந்தியாமலே பைக்குள்ளிருந்து கவரை எடுத்து நீட்டினாள்.

உள்ளிருந்து பச்சை நோட்டு எட்டிப் பார்த்தது. எண்ணெய்க் கறை தெரியும் அதே நோட்டுக்கள்.

"ஏம்மா?...."

"மாமாவே கொடுத்திட்டாங்க அக்கா!"

குரல் தாழ்ந்தது. "நான் தப்புச் செஞ்சிட்டேன் அக்கா!" அந்தக் கண்களில் முத்து உருள்வதை விஜயம் எப்படிக் காண்பாள்? அவள் கைகள் அந்தப் பூவை அணைத்தன. "ஸ்கூலிலிருந்து நேராக வந்துவிடு ரோஜினி! நாமெல்லோரும் கடைக்குப் போவோம். ரோஜினிக்குப் பிறந்த நாள். ஃப்ராக் வாங்க வேண்டும். உமேஷ்! ரோஜினி அக்காவுக்கு டாட்டா சொல்லு. ஸ்கூலுக்குப் போகல இங்கே வாடா?"

வேலிக்கப்பால் விழுந்த பூ, அன்புச் சரத்தில் தளைப் பட்டதும், சிலிர்த்துச் சிரித்தது.

# வரம் அளித்த புரட்சி



அவன் ஓர் ஆசிரியன்; சிறந்த எழுத்தாளன்.

பெரும்பான்மையான எழுத்தாளர்களைப் போல அவனுக்கும் இரவு வேளைதான் எடுப்பான வேளை. படுக்கையில் படுத்துப் படிக்க ஆரம்பித்து விட்டானானால், பொழுது போவதே தெரியாது. சில சமயம் பொழுது விடிந்து விடும். அவன் கண்கள் உறங்கா. சில சமயம் எப்பொழுது கண்கள் அயர்ந்தன என்பது அவனுக்குத் தெரியாது. பொழுது விடிந்து வெகு நேரமானாலும் கண்கள் திறவா.

அன்றும் அவன் படுக்கையில் படுத்த வண்ணம், 'அபூபன் ஆதமின்' கதையைப் படித்துக் கொண்டிருந்தான்.

....திடீரென்று அவன் அறையில் ஒளி பரவியது. தேவதை ஒன்று தோன்றியது. தேவதையின் கரங்களில் பொன்னிறமான புத்தகம் ஒன்று காட்சி தந்தது. "இந்தப் புத்தகத்தில் ஆண்டவனுக்குப் பிரியமானவர்களின் பெயரை நான் எழுதப் போகிறேன்" என்றது அந்தத் தேவதை.

அதைக் கேட்டு அபூபன் ஆதம் கூறுவான்: "தன் தோழர்களை நேசிக்கும் மனிதர்களின் பெயரோடு என்னுடைய பெயரை எழுதிக் கொள்."

தேவதை மறைந்தது. மறு நாள் இரவு அதே நேரத்தில் அது மீண்டும் தோன்றியது. அதன் கையில் அதே பொன்னிறப் புத்தகம் இருந்தது. அதில் ஆண்டவனை நேசிக்கும் மனிதர்களின் பெயர் எழுதப்பட்டிருந்தது. எல்லோருக்கும் முதலாவதாகத் தன் பெயர் எழுதப்பட்டிருப்பதை அபூபின் ஆதம் கண்டான்.....

ஆசிரியன் இதைப் படித்தபடியே நன்றாகத் தூங்கி விட்டான்.

* * *

நள்ளிரவு அறையில் கண்களைப் பறிக்கும் ஒளி பரவியது. கண்களைப் பிசைந்தவன் "தெய்வமகனே! நீ யார்? இங்கு ஏன் வந்தாய்?" என்று கேட்டான்.

"நான் தமிழ் இலக்கிய வரலாறு. இலக்கிய மேதைகளை அமரர்களாக்குவதற்காக வந்திருக்கிறேன்!" என்று பதில் கிடைத்தது.

ஆசிரியன் வியப்புடன் அந்தத் திவ்விய புருஷனின் காவி உடையையும், பகல் போல் வெளுத்த நரைமயிரையும் தாடியையும் பார்த்துக் கொண்டேயிருந்தான்.

பிறகு சமாளித்துக் கொண்டு, "வரலாற்றுப் புருஷனே! சிரம் தாழ்த்தி வணங்குகிறேன் நான். என்னைச் சிரஞ்சீவியாக்க முடியுமா?" என்று கேட்டான்.

தேவதை கூறியது: "கட்டாயம் முடியும். அதற்காகத்தானே நான் வந்திருக்கிறேன். உன் படைப்புக்களை யெல்லாம் வரலாறு ஏற்றிருக்கிறது."

இதைக் கூறிய தேவதை ஒரு பொன்னிறப் புத்தகத்தைப் பிரித்து ஆசிரியனுக்கு எதிரே வைத்தது. "நான் அமரர்களாக்கும் ஆசிரியர்களின் பெயர்களெல்லாம் இதில் இருக்கின்றன. இந்தா, இந்தப் புத்தகத்தில் உன் பெயரையும் எழுது!" என்றது.

"உன்னிடம் ரப்பர் இல்லையா?" என்று கேட்டான் ஆசிரியன்.

"இருக்கிறது. ஆனால் என் நிபந்தனை ஒன்று உண்டு. பென்சிலோ ரப்பரோ ஏதாவது ஒன்றைத்தான் ஒருவர் உபயோகிக்கலாம்!" என்றது தேவதை.

"எனக்கு ரப்பரே கொடு! பென்சில் வேண்டாம்!" என்றான் ஆசிரியன்.

தேவதை வியந்தது.

ரப்பரை வாங்கிக் கொண்ட ஆசிரியன் நான்கைந்து பெயர்களை அழித்து விட்டான்.

தேவதை மறைந்தது. ஆசிரியனும் மகிழ்ச்சியோடு உறங்கி விட்டான்.

* * *

மறு நாள் இரவு முந்திய இரவைப் போலவே, ஆசிரியனின் அறையில் பிரகாசம் பரவியது. திவ்விய புருஷன் தரிசனம் தந்தான்.

அவன் கையில் அதே பழைய புத்தகம் இருந்தது. அதைப் பிரித்து ஆசிரியனுக்கு எதிரே வைத்தது தேவதை.

தன் பெயர் ஏகப் புரட்சிக் கவிஞர்களிடையே மிளிர்வதை ஆசிரியன் கண்டான்.

அவன் மகிழ்ச்சியில் மெய்ம்மறந்தான்.

'பென்சிலைக் காட்டிலும் ரப்பருக்குள்ள சக்திதான் என்ன?' இந்தப் பெருமிதத்தில் தான் அவன் அப்படி விம்மிதமுற்றானோ?

[ஆதாரம்: ஹரிசங்கர் பர்சாயியின் ஹிந்திக் கதை]

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon